# சீதா சரிதம்

**ஸ்ரீ உ. வே. மஹாவித்வான் காரப்பங்காடு வேங்கடா சார்யஸ்வாமியின் உபன்யாஸங்களிலிருந்து ஸ்ரீமான் C, R. ஸ்ரீநிவாஸய்யங்கார் தொகுத்தளிக்கும் நூலிது. ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசாரியஸ்வாமி நினைவு வெளியீடாக ஸ்ரீமான் குமாரவாடி சே. ராமாநுஜாசாரிய ஸ்வாமி அறநெறி பதிப்பகம் மூலமாக பதிப்பித்து வெளி யிட்டது.**

ச்ரிய:பதியான ஸர்வேசுவரன் இந்த உலகத்திலுள்ள தம் போன்ற ஜீவாத்மாக்களின் க்ஷேமத்தைத் திருவுள்ளம் பற்றி எண்ணிறந்த அவதாரங்களைச் செய்திருக்கிறான். உயர்ந்தவன் தாழ வந்து பிறப்பதுதான் அவதாரம் எனப்படும். ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையில், ''பஹூநி மே வ்யதீதாநி ஜன்மாநி தவச அர்ஜுந'' என்று அர்ஜுனனைப் பார்த்து, 'உனக்கு எப்படி அநேக பிறவிகள் உண்டோ, அதே போன்று நானும் பற்பல அவதாரங்களை எடுக்கிறேன். உன் பிறவிகள் கர்மத்தினால் உண்டா கின்றன. நானோ எனில் என் இச்சையினால் அவதரிக்கிறேன்' என்று திருவாய் மலர்ந்திருக்கிறான்.

அப்படி பகவான் செய்திருக்கும் அவதாரங்கள் அநேகம். அவைகளுள் முக்கியமானவை 'பத்து அவதாரங்கள்.' அப்பத்து அவதாரங்களில் ஸ்ரீராமாவதாரமும் ஸ்ரீகிருஷ்ணாவதாரமும்தான் பூர்ண அவதாரங்களாகப் பார்க்கப்படுகின்றன.

இப்படி பகவான் அவதரிக்கும் போதெல்லாம் அவனுடைய திவ்ய மஹிஷியான பெரிய பிராட்டியும் (மஹாலக்ஷ்மி) ஒக்க அவதரிக்கிறாள். 'தேவத்வே தேவ தேஹோயம் மனுஷ்யத்வே ச மாநுஷீ' என்கிறபடி. அவன் தேவனாக அவதரிக்கும்போது, இவள் தேவ ஸ்திரியாகவும், அவன் மனுஷ்யனாக அவதரிக்கும்போது இவள் மனுஷ்ய ஸ்திரீயாகவும் அவதரிக்கிறாள். ஸ்ரீவாமனாவதாரத் திலும் அவன் ப்ரமஹ்சாரியாக மஹாபலியினிடம் யாசக வாங்கப் போகும் போதும், 'அகலகில்லேன் இறையும்' என்று மார்பை விட்டு அகலாதவளான ஸ்ரீலக்ஷ்மியை கிருஷ்ணாஜினத் தினால் (மான் தோலால்) மறைத்துக் கொண்டு போயிருக்கிறான் எனக்கூறுவர்.

**ஒரு மிதுனமே நமக்கு ரக்ஷகம்**

பகவானும் பிராட்டியும் சேர்ந்தே நம் அநிஷ்டத்தைப் போக்கி இஷ்டத்தைக் கொடுக்கிறார்கள். ஓர் மிதுனமே (இரட்டை நமக்கு ரக்ஷகம். ஸ்ரீராமாயணத்தில், ''ராகவ த்வே அபவத் ஸீதா'' என்கிறபடி பகவான் ஸ்ரீராமனாக அவதரித்தபோது, ஸ்ரீலக்ஷ்மி) பிராட்டி ஸ்ரீ சீதாதேவியாக அவதரித்திருக்கிறாள். சீதை கர்ப்ப வாஸமில்லாமல் பூமியிலிருந்து தோன்றினாள். மேலும் இராவண வதத்துக்குப் பிறகு யுத்தம் முடிந்ததும் தேவர்கள் சீதாதேவியை மஹாலக்ஷ்மியாகவே கொண்டாடியிருப்பதையும் நாம் காண லாம். இதனால், ஸ்ரீதேவியான பெரிய பிராட்டியே சீதையாக அவதரித்திருக்கிறாள் என்பது தெளிவாகத் தெரியவருகிறது

சீதா சரித்திரமே ஸ்ரீராமாயணம். ஸ்ரீ வால்மீகி பகவான் **''காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்னம் சீதாயாஸ் சரிதம் மஹத்'** என்று ஸ்ரீராமாயணத்திற்கு 'சீதா சரிதம்' என்றே மற்றோர் பெயரிட்டிருக்கிறார்.

உலகத்தில், ஒருவனுக்கு எல்லா அவயவங்களும் அவசியமா யிருக்கச் செய்தேயும், கண் தான் மற்றவைகளைக் காட்டிலும் பிரதானமாகப் பார்க்கப்படுகிறது. இரண்டு கண்களுமே முக்கிய மானவைதான்; இருந்தாலும் இடக் கண்ணைவிட வலக்கண்ணை மேலானதாகக் கொண்டாடுவதுண்டல்லவா? அதுபோல நமக்குப் பிராட்டியின் ரக்ஷகத்வம், பகவானின் ரக்ஷகத்வத்தைவிட ஒரு படி மேம்பட்டதே.

நிருபாதிக மாதாவான பிராட்டிக்குத்தான் வாத்ஸல்யத்தில் (தாய்ப் பசுவுக்குக் கன்றுனிடம் உள்ளது போன்ற அன்பு, பிரதானம்: பகவானுக்கு பித்ருத்வம் (தந்தையின் கடுமை) கலசின மாத்ருத்வமே (தாயின் இனிமை) உள்ளது; அதாவது நம் வினையையொட்டி நிக்ரஹம் (வெறுப்பு) அநுக்ரஹம் விருப்பு) இரண்டும் கலந்தே காணப்படுகிறது. பிராட்டியோ **'அஜ்ஞாத நிக்ரஹா'** (வெறுப்பையே அறியாதவள்) என்று கொண்டாடப் படுகிறாள். மாத்ருத்வமே பிராட்டியின் ஸ்வரூபம்.

இப்படிப்பட்ட சீதா பிராட்டியின் சரித்திரத்தைச் சொல்லுவ திலேயே ஸ்ரீராமாயணத்துக்கு நோக்கு. இதற்கு ஏற்பவே ஸ்ரீராமனின் சரித்திரம் விவரிக்கப்பட்டிருக்கிறது. **'ஸ்ரீ ராமாயணத் தாலே சிறையிருந்தவள் ஏற்றம் கூறுகிறது'** என்பது லோகாசார்யன் வார்த்தை.

ஸ்ரீபராசர பட்டரும்—''ஸ்ரீமத் ராமாயண மபி பரம் ப்ராணிதித்வத் சரித்ரே.'' என்று அருளிச் செய்திருப்பதையும் நாம் பார்க்கலாம்.

'ஸ்ரீமத்'-என்பதால் பிராட்டியின் ஸம்பந்தம் சொல்லுகிறது பரம்-பிராட்டியின் சரிதம் சொல்வதால் பாரதத்தைக் காட்டிலும். ஸ்ரீராமாயணம் மேம்பட்டது. எங்ஙனே என்னில், லக்ஷம் கிரந்தம் கொண்ட (முப்பத்திரண்டு எழுத்துக் கொண்டது ஒரு கிரந்தம்) ப்பாரதம் என்னும் மஹாக்ரந்தத்தை வியாஸர் இயற்றி முடித்தார். ஆயினும் அவரிடம் மனஸ் சந்துஷ்டி ஏற்படவில்லை. ஏனெனில் அந்நூல் முழுவதும் மற்றவர்களின் உற்பத்தி விநாசம், காமக்ரோத சரிதங்கள், போர்கள் பற்றிய செய்திகள் நிறைந்த 'பூசல் பட்டோலை'யாகவே முடிந்தது. அத்தகைய குற்றங்கள் இராமாயணத்துக்கு இல்லை என்பதால், ஸ்ரீராமாயணம் மேம் பட்டது என்று தேறுகிறது.

அபி' என்பதால் ஸ்ரீ ஸூக்தம் மட்டும் 'பிராட்டியின் பெருமையைக் கூறவில்லை; ஸ்ரீராமாயணமும் பிராட்டியின் பெருமையை பரக்கச் சொல்கிறது என்று காட்டப்படுகிறது

ஆக, வால்மீகியும், பட்டரும், லோகாசார்யனும் அருளிச் செய்துள்ளபடி, ஸ்ரீராமாயணம் என்றிருந்தாலும், சீதா சரித் திரமே அந்நூலில் பிரதானமாக விளங்குவதாகத் தேறுகிறது.

சில வாக்யங்களில், வாச்யார்த்தம், த்வந்யர்த்தம் என்று இரண்டு வகையில் பொருள் காணலாம். அவ்வாறு பார்த்தால் ஸ்ரீ ராமாயணத்தை மேலெழப் பார்த்தால் ஸ்ரீ ராமன் சரித்திர மாகவே இருந்தாலும், அந்நூலின் உயிர் நாடியாக விளங்குவது சீதையின் சரித்திரமேயாகும்.

ஒரு காவ்யத்தைச் செய்யும்போது, முதலில் ஒரு ச்லோகத் தாலே சுருங்கச்சொல்லி, பின்பு காவ்யத்தை விவரிப்பது கவிகளின் மரபு. 'ஓம்' என்கிற ப்ரணவத்தில் ஸகல வேதார்த்தங்களும் அடங்கியிருப்பதாக வைதிகர்கள் எல்லோருமே ஒருமனதாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ப்ரணவத்தில், உள்ளடங்கிய அக்ஷரங்களில் முதல் எழுத்தான 'அ' காரத்திலேயே எல்லா அர்த் தங்களும் உள்ளதாக ஸ்ரீ வைஷ்ணவர்கள் கருதுகிறார்கள்; அது போல ஸ்ரீ ராமாயணத்திலேயும் முதலில் அமைந்துள்ள ஒரு ச்லோகத்தில் ஸ்ரீ ராமாயணத்தின் ஸகல அர்த்தங்களும் அடங்கி யிருப்பதாகக் கூறுவர்.

ஸ்ரீ வால்மீகி பகவான் ஸ்நாம் செய்ய சிஷ்யருடன் தமஸா நதிக்குப் போகிறார். அந்நதிக்கரையில் உள்ள அழகிய சோலையில் ஆணும் பெண்ணுமாக இரண்டு கிரவுஞ்சப் பறவைகள் மரக்கிளையில் மகிழ்ந்து குலாவியிருந்தன. ஒரு வேடன் அவற்றில் ஒன்றைக் குறி வைத்து ஆண் பறவையை அம்பினால் அடித்துக் கீழே தள்ளுகிறான். ஆணை இழந்து பெண்பட்சி துடித்துக் கதறுகிறது. இக்காட்சியைக் கண்ட வால்மீகி மனம் இரங்கி, அவ் வேடனைப் பார்த்துச் சபிக்கிறார். **''மாநிஷாத ப்ரதிஷ்டாம் த்வமகமஸ் சாச்வதீ ஸமா: யத் க்ரௌஞ்ச மிதுநாத் ஏகம்அவதீ: காம மோஹிதம்''** என்று அந்த சாபம் ஒரு ச்லோகமாகவே அமைகிறது. ''அட நிர்பாக்யனே! காம வேட்கையில் களித்திருந்த கிரவுஞ்சம் ஒன்றைக் கொன்றாய்; அதனால் நீ வெகு காலம் வாழ மாட்டாய்'' என்பதே அவர் இட்ட சாபம், இது மேலேழப் பார்க்கும் பொருள்.

ஆனால், இதன் தொனிப்பொருள் ஸ்ரீராமாயணத்தின் சுருக்கமாகவும் மங்கள ச்லோகமாகவும் அமைகிறது. மா—மஹாலக்ஷ்மி. நிஷாத—நித்யவாசம் செய்யும் ஸ்ரீநிவாஸனே! என்பது தேறி நிற்கும் பொருள். அதாவது ச்ரிய:பதியான—லக்ஷ்மியை மார்பில் கொண்டவனே! இராவணன் மண்டோதரி என்று, காமமயக்கம் கொண்ட இருவரில் இராவணனைக் கொன்று நெடுங் காலம் நீர் கீர்த்தியுடன் வாழ்வீர்-என்பதே இதன் தொனிப் பொருளாகும்.

ஸ்ரீ ராமாயணத்தில், தந்தை, தனயன், கணவன் மனைவி ஆண்டான் [ஸ்வாமி] அடிமை (தாஸன்) என்று இப்படி இருப்போர் அவரவர் தர்மத்தை [நெறியை]-எப்படி கடைப்பிடிக்க வேண்டும் என்று ஸாதாரண தர்மத்தைச் சொல்லியிருந்தாலும் அதிக அநேக விசேஷ அர்த்தங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் தான் நம் பாஷ்யகாரர் திருமலை நம்பியினிடம் ஒரு வருஷ காலம் ஸ்ரீராமாயணத்துக்குப் பலபடியான விசேஷ அர்த்தங்களைக் கேட்டிருப்பதாகக் கூறுவர்.

### உபாயத்துவமும் புருஷகாரத்துவமும்

பகவானுக்கேயுள்ள அசாதாரண (சிறப்பு) தர்மம் உபாயத்வம். (அதாவது ஒரு ஜீவனுக்கு முக்தி அளிக்கும் சக்தி, அதே போல் பிராட்டிக்கேயுள்ள சிறப்பான தர்மம் புருஷகாரத்வம், (அதாவது தோஷமே நிறைந்துள்ள இந்த சேதனனை- அறிவுடைய ஜீவனை) பகவான் அங்கீகரிக்கும்படி செய்யும் குணம்.

அசாதாரண தர்மம் என்றால், அந்த தர்மம் மற்ற யாரிடமும் சிறப்பாகப் பார்க்க முடியாதது. உபாயத்வம் என்ற தர்மம் பகவானைத் தவிர வேறு யாரிடமும் காண முடியாதது. புருஷகாரத்துவமும் பெரிய பிராட்டியாரான மஹாலக்ஷ்மியைத் தவிர மற்ற யாருக்கும் உரியதன்று. மற்ற பிராட்டிமார்க்கும், ஆசார்யர்களுக்கும் புருஷகாரத்துவம் என்பது பிராட்டியடியாகத் தான் ஏற்படுகிறது. அதாவது அவள் காரியத்தையே இவர்கள் செய்கிறார்கள்.

**'த்வயம்'** என்கிற மந்திர ரத்னத்தில் 'ஸ்ரீமத்' என்கிற சொல்லால் 'புருஷகார' அவசியத்தையும், 'ப்ரபத்யே' என்பதால் 'புருஷனின்' அவசியத்தையும் சொல்லுகிறது. பகவானுடைய உபாயத்துக்கு இந்த இரண்டும் தேவையே.

### புருஷகாரம் என்றால் என்ன?

''புருஷம்—கரோதீதி - புருஷகார:'' அதாவது - புருஷனைச் செய்கிறாள் - புருஷன் யார், எனில்—சேதனன் - ஜீவன் - ஒரு புருஷன்; பரமசேதனன் - புருஷோத்தமன் - என்பது மற்றொரு பொருள். பகவத் விஷயத்தில் விமுகனான (நாட்டமற்ற) சேதனனை பகவானிடம் ஆபிமுக்யம் (அன்பு) உண்டாகி ஆச்ரயிக்கும் (அடைக்கலம் புகும்) படி செய்கிறாள். தோஷ பூயிஷ்டனான (குற்றம் நிரம்பிய) சேதனனிடம் நிக்ரஹபரனான (கோபம் மிக்கவனான) பகவானை அச்சேதனனிடம் அநுக்ரஹம் (கருணை) கொள்ளும்படி மாற்றுகிறாள். இப்படி இருவரையும் திருத்துவது தான் 'புருஷகாரம்' என்பது.

### புருஷகாரத்துவம்

ஆத்மக்ஷேமம் பெற பக்தி அல்லது பிரபத்தி [சரணாகதி] செய்ய வேண்டும் என்று வேதாந்த சாஸ்திரம் கூறுகிறது. இதில் 'சரணாகதி' என்னும் பிரபத்தியைத்தான் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் முக்கியமாகக் கொள்ளுகிறார்கள்; இந்த பிரபத்தியைச் செய்யும் போது, பிராட்டியை புருஷகாரமாகப் பற்றுவது தான் முறை என்று எல்லா ஆசார்யர்களும் ஒருபடியாகக் கருதியுள்ளனர்.

'ராஜாதி ராஜஸ் ஸர்வேஷாம், (அரசர்க்கெல்லாம் அரசான பேரரசன்) என்கிறபடி பகவான் ராஜாதிராஜன் ஸார்வபௌமன் (எல்லாம் நிறைந்தவன்; அதற்குச் சேர அவனுக்கு

அநேக மஹிஷிமார்கள் (மனைவியர்) உண்டு. 'பஞ்சராத்ரம்' என்னும் சாஸ்திரத்தில் ஸ்ரீதேவியான லக்ஷ்மிக்குத்தான் புருஷகாரம் என்பது அஸாதாரண தர்மம் என்று தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

**புருஷகார க்ருத்யம் [செயல்]**

அபராத பூயிஷ்டனை (குற்றங்கள் நிறைந்த) சேதனன் ஏதோ ஒரு ஜன்மாவில் (பிறவியில்) ஓர் ஆசார்யனை அடைந்து உபதேசம் பெற்று, டகவத் ருசி உண்டாகி, பகவானைப் பற்றுகிறுன் என்றுல். அப்போது பகவான் ஸ்வதந்திரன் (தன்னிச்சைப் படி நடப்பவன்] ஆகையால் தான் விதித்திருக்கும் சாஸ்திர மரியாதையைப் பார்த்து அந்த சேதனன் செய்திருக்கும் எண்ணற்ற பாபங்களை குறித்துச் சீறிச் சிவந்து அந்த சேதனனை அதற்குச் சேர நிக்ரஹித்து (வெறுத்து) நிற்கிறுன். அப்போது பக்கத்திலுள்ள பிராட்டி பகவானின் நிக்ரஹத்தை மாற்றி அந்த சேதனனை அநுக்ரஹிக்கும்படி செய்கிறுள். பிராட்டியினிடம் உள்ள இந்தச் செயல்தான் புருஷகாரக்ருத்யம்—அதாவது புருஷகாரச் செயல் என்பது.

பகவானிடம் ஸ்வாதந்தர்யம் (தன்னிச்சை) தலை எடுத்திருக்கும்போது, அதை மாற்றி அவனுக்குள்ள தயை,க்ஷமை [கருணை பொறுமை] முதலிய கல்யாண (நல்) குணங்களைத் தூண்டுவதே பிராட்டியின் செயல். சேதனனை அதற்கேற்ப தன் உபதேசத்தாலும் அருளாலேயும் திருத்தி வைத்து பகவானைப் பற்றும்படி செய்கிறுள்; அப்படிப் பற்றுகிற சேதனனை ஏற்று அருள் புரியும்படி பகவானைச் செய்கிறுள்.

பிராட்டியை புருஷகாரமாகக் கொண்டு பகவானை உபாயமாகப் பற்றவேண்டும் என்பது தேன்ஞசார்ய ஸம்பிரதாயம். பிராட்டியை புருஷகாரமாகவும் உபாயமாகவும் (உபாயத்துவம் இருக்குமிடத்தில் புருஷகாரத்துவத்துக்கு இடமேயில்லையே) பற்ற வேண்டும் என்பது மற்றும் சிலர் அபிப்ராயம் ஆனல் ஸ்வாமி தேசிகன் சதுச்லோகி மூன்றுவது ச்லோக வ்யாச்யானத்தில் "எம்பெருமான் தான் மோக்ஷமளிப்பவன்; அதை அடையும்படி கடக ஸ்தானத்தில் பிராட்டி இருக்கிறுள்" என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதை நாம் காணலாம்.

மேலும்; சிலர் நாம் பிராட்டியை ஆச்ரயித்தால்தான் நமக்கு அந்தப் பிராட்டி க்ருபையைச் செய்கிறுள் என்கிறுர்கள். ஆனல் நாம் பிராட்டியைப் பற்றிஞலும் பற்றுவிட்டாலும் அவள் நமக்கு

க்ருபையைச் செய்கிறவள்தான் என்பது தென்னாசார்ய பக்ஷம். இதை சீதாபிராட்டி, காகாசுரன் பக்கலிலும் ராக்ஷஸிகள் பக்கலிலும் வெளியிட்டிருப்பதை நாம் காணலாம்.

### புருஷகார குணங்கள் :

இப்படி புருஷகாரம் செய்ய பிராட்டியினிடம் முக்கியமாக இருக்க வேண்டிய குணங்கள் மூன்று. அவையாவன:- க்ருபையும் பாரதந்த்ரியமும், அநந்யார்ஹத்வமும். இவற்றில் க்ருபை புருஷகாரம் செய்ய ஸ்வரூபத்திலே—தனக்கேயுரிய இயல்பாக—உபயோகப்படுகிறது. மற்றவை (பாரதந்த்ரியம்—பிறர் இட்ட வழக்காயிருப்பது;-அநந்யார்ஹத்வம் மற்றவர்க்கன்றி அவனுக்கே உரியளாயிருக்கை இந்த மூன்று குணங்களும் பெரிய பிராட்டியின் அவதாரமான சீதையினிடம் உள்ளன என்பதை ஸ்ரீராமாயணம் விளக்கிக்காட்டுகிறது.

### க்ருபை

பிறர் நோவு கண்டால், 'ஐயோ!' என்று இரங்குவது க்ருபை. இந்தக் குணம் பிராட்டினிடம் இருப்பதால் தான் ஸம்சாரி (கர்ம வாஸனை ருசிகளில் அகப்பட்ட) சேதனன் படும் கஷ்டத்தைப் பார்த்து இரக்கம் கொண்டு, பகவானிடம் விமுகனான சேதனனைத் தன் உபதேசத்தாலும் அருளினாலும் திருத்தி, பகவானிடம் அன்பு உள்ளவனாகச் செய்து பகவானைப் பற்றும்படி செய்கிறாள். மாத்ருத்வ ப்ரயுக்தமான (தாயிருக்கும் தன்மையுடன்) கூடிய க்ருபை பிராட்டிக்கு நம்மிடம் முழுமையாக உண்டு. 'தேவ்யா காருண்ய ரூபயா' என்று கருணையே ஸ்வரூபமாக (ஸ்வம்—ரூபம்—சுய வடிவம்,) உடையவள் பிராட்டி.

### பாரதந்த்ரியம்

பாரதந்த்ரியம் என்பது — பராதீனத்துவம் — மற்றொருவர் இச்சைக்கு ஏற்ப, அவர் இட்ட வழக்காயிருப்பது பாரதந்த்ரியம் எனப்படும். பிராட்டி பகவானுக்கு பரதந்த்ரையாயிருப்பவள். இவள் தன் இச்சையினாலேயே பகவானுக்குப் பரதந்த்ரையாய் தன்னை அமைத்துக் கொண்டிருக்கிறாள் என்பது சிலர் பக்ஷம். ஆனால் இவள் இயற்கையாகவே தன் ஸ்வரூபத்தாலும் (மனைவியாய் இருத்தலினாலும்) பகவானுக்கு பரதந்த்ரை என்பதே லோகாசார்யனின் பக்ஷம். இது அவளுக்கு நிரூபகமான தர்மம். இதை இங்கே கொஞ்சம் விவரிப்போம் :

ஒருவனுடைய சரீரத்தின் ப்ரவ்ருத்தி (செயல்படுதல்) நிவ்ருத்தி (செயல்படாதிருத்தல்) அந்த உடலை அடையப் பெற்றிகுக்குப் ஜீவாத்மாவின் ஆதீனமாயிருப்பதால், அந்த சரீரம் அந்த ஜீவன் இட்ட வழக்காயிருக்கிறது. ஜீவனுக்கு பரதந்த்ரமாயிருக்கிறது சரீரம் என்பர். இத்தகைய பாரதந்த்ரியத்தை (இட்ட வழக்காய் இருத்தல்) நாம் நமக்குரிய மனைவி, மக்களிடமும் காணமுடியாது. இப்படி சரீரம், ஜீவனுக்கு பரதந்த்ரமாயிருப்பது போல ஜீவாத்மாவின், ஸ்திதி (நிலை) ப்ரவருத்தி, நிவ்ருத்தி அனைத்தும் பகவானின் அதீனமாக இருப்பதனால், ஜீவன் பகவானுக்கு பரதந்த்ரன் என்பது தேறுகிறது: இப்படி ஜகத்தெல்லாமும் பகவானுக்குப் பரதந்தரப் பொருள்தான். அப்படியே பிராட்டியும் பகவானுக்கு பரதந்த்ரப் பொருள்தான். ஜகத்தில் அவளும் அடங்குவதால் அங்படி கூவப்படுகிறது. இதை பிராட்டியே பாஞ்ச்ராத்திர சாஸ்திரத்தில் "நான் வைஷ்ணவமான சரீரம்" என்று தன்னை, விஷ்ணுவுக்குச் சரீரமாகவே சொல்லுக் கொண்டிருக்கிறாள், இப்படி பிராட்டி தன் ஸ்வரூபத்தினாலேயே பகவானுக்கு பரதந்த்ரை என்பது தேறுகிறது.

"ஈசுவர: ஸர்வ பூதாநாம்" என்று பகவான் எல்லா ஜகத்துக்கும் ஈசவரன்—நியமனம் செய்கிறவன்-என்று சொல்லப் பட்டிருக்கிறது பிராட்டியைச் சேர்த்தே 'ஸர்வபூதானும் என்று சொல்லப் பட்டிருப்பதனாலே, பிராட்டி உள்பட இந்த ஜகத்திலுள்ள எல்லாவற்றுக்கும் பகவான்தான் ஈசுவரன். இப்படி அவன் ஈசுவரனாக இருப்பது ஸ்வதஸ்ஸித்தமாகையாலே, (இயல்பாகவே அமைந்தது) அது எப்படி என்ற கேள்வி ச்ருதியில் எழுப்பப்பட வில்லை.

ஆனால் "ஈசாநா அஸ்ய ஜகத:" என்கிற ச்ருதியில் பிராட்டி ஜகத்தை எல்லாம் ஆக்ஞை செய்பவள் என்கிற இடத்தில். அது எப்படி என்று கேள்வி எழுகிறது. அதற்குப் பதில் அளிப்பதாக "விஷ்ணு பதனீ" என்று ச்ருதி அமைந்துள்ளது பகவானுக்குப் பத்நீயாக இருப்பதால் ஜகத்தை அவள் நியமிக்கிறாள் என்கிறது ச்ருதி இதனால் பத்நீத்வம் பற்றி வந்த பாரதந்த்ரியமும் பிராட்டிக்கு உண்டு என்பது தன்னடைவே தேறி நிற்கும் இப்படி பிராட்டி ஸ்வரூபத்தாலும், பத்நீத்வ ஸம்பந்தத்தாலும், பகவானுக்கு பாதந்த்ரை என்பது ஸ்பஷ்டம்.

## அநந்யார்ஹத்வம்

பகவானைத் தவிர மற்ற யாருக்கும் உரித்தானவளல்ல பிராட்டி. பகவான் ஒருவனுக்கே உரியவள். இதை அவளே

**'அநந்யா ராகவேணுஹம்'** என்று சொல்லியிருக்கிறுள். இப்படி அவனுக்கே உரியவளாகையாலே, இவள் சொல்லும் வார்த்தையை பகவான் நமக்கு ஹிதத்தை (நன்மையை)த்தான் சொல்லுவாள் என்று விசுவசித்து (நம்பி) சேதனனைக் குறித்து அவள் புருஷகாரம் செய்யும்போது அந்த சேதனனிடம் அன்பைச் செய்து அவனே ஏற்று உகக்கிறுன். இதற்கு உபயுக்தமான (தக்க) தர்மமே அநந்யார்ஹத்வம்.

இப்படி தனக்கேயுரிய புருஷகாரத்வத்துக்கு ஏற்ப மூன்று குணங்களேயும் சீதாபிராட்டி பெற்றிருப்பதை ஸ்ரீராமாயணத்தில் பிரகாசப்படுத்தி (நன்கு வெளியிட்டு)யிருக்கிறுர்கள்.

அது எங்ஙனே—என்னில், சீதை ராகவனேவிட்டு மூன்று தடவை பிரிய நேரிட்டிருக்கிறது. ஒவ்வொரு பிரிவிலும் ஒவ்வொரு குணத்தை அவள் முறையே வெளியிட்டிருக்கிறுள்.

ஸ்ரீராமன், லக்ஷ்மணன், சீதை மூவரும் தண்டகாரண்யத்தில் இனிது எழுந்தருளியிருக்கச் செய்தே, இராவணன் பிரித்தான் என்கிற ஒரு வியாஜத்தைக் (சாக்காக) கொண்டு ஸ்ரீராமனே விட்டுப் பிரிந்து இலங்கையில் பத்து மாதம் சிறை வாசம் செய்திருக்கிறுள்.

## முதல் பிரிவு

மலருக்கு மணம் போலும், ரத்னத்துக்கு ஒளி போலும் யாராலும் பிரிக்க முடியாதபடி பகவானிடமிருந்து பிரிக்க முடியாத தத்வம் லக்ஷ்மி. அவதார நிலேயில் இராவணன் பிரித்தான் என்று சொல்வது பகவானுடைய தெய்வத் தன்மைக்குச் சேராது. தத்வம் அளவு பட்டு விடும். மேலும் பகவானேப் போன்று பிராட்டியும் அகர்ம வச்யை—பகவானுக்காவது கர்ம பாரதந்த்ரியத்தை ஒருவாறு சொல்லலாம். அதாவது சேதனன் பண்ணுகிற கர்மாவை அநுசரித்து அவனுக்குப் பலன் அளிக்கும் பொறுப்பில் உள்ளவனுகையால் கர்மாவை அநுசரிக்கும் நிலேயை ஒருவாறு கூறலாம். அதுவும் இல்லே பிராட்டிக்கு. எந்தவிதமான குற்றம் குறையும் கூறமுடியாத தேஜஸ் (ஒளி) மிக்கவள். பகவானிடமிருந்து என்றும் பிரிவே இல்லாததால்; நித்ய அநபாயினி. அப்படியிருக்க பிரிவு ஏன்?

காட்டில் மாயமான் பின் சென்ற ஸ்ரீராமனேத் தேடிச் செல்லும்போது, அரக்கர் நிறைந்த அக்காட்டில் சீதை தனித்து

இராமன் லக்ஷ்மணனோடு தானும் சென்றிருக்கலாமல்லாவா? அதுவும் செய்யவில்லை.

மேலும் சீதைக்கு 'கற்பின் கனலி' என்றே பெயர் உண்டு. தீயைப் போன்று கற்பினால் ஒளிர்பவள், இலங்கையில் அநுமானின் வாலில் அரக்கர் நெருப்பிட்ட போது. அந்நெருப்பு சுடாமல் இருக்கும்படி "சீதோ பவ ஹநூமத:" என்று சொல்லி அநுமானுக்கு நெருப்புச்சுடாமருக்க அருள் புரிந்தவள், ராவணன் தன்னை எடுக்க வரும் போதே "பஸ்'மீ பவ" (நீ சாம்பலாய்ப்போ] என்று ஒரு வார்த்தை சொல்லி அவனை அழித்திருக்கலாம்.

அவ்வளவு சக்தி வாய்ந்தவள் அவ்வாறு செய்யாமல் பிரிவை ஏற்றுக்கொண்டு சென்றாள். இராவணன் பிரித்தான் என்ற வியாஜத்தினால் (சாக்கினால்) சிறையிருந்ததற்கு க்ருபை என்ற அவளது குணமே காரணம்.

பகவானை ஆச்ரயித்த (பற்றின) தேவ ஸ்திரீகளை இராவணன் சிறையில் வைத்திருந்தான். பகவானைப் பற்றியவர்களின் ஸ்திரீகள் சிறையில் இருக்க தாயின் நிலையிலுள்ள இவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. அவர்களது சிறையிருப்பை நீக்கவே இவளும் சிறைபட்டாள். தன் குழந்தை கிணற்றில தவறி விழுந்தால், அதை மீட்க தாய் தயங்காது ஒக்க குதித்து விடுவாள்: அது போன்றே தேவப் பெண்களின் மீதுள்ள பரிவினால் இவளும் ராவணனிடம் சிறைப்பட்டாள். "**தனிச் சிறையில விளப்புற்ற கிளி மொழியாள்**" என்றே ஆழ்வார் இதைக் கொண்டாடிப் பேசியிருக்கிறார்.

இப்படி தன் க்ருபையை, ஸ்ரீராமனை விட்டுத் தன் முதன் பிரிவினால் ஸ்ரீராமாயணத்தில் சீதை வெளியிட்டிருப்பதாக ஆசார்யார்கள் அருளிச்செய்வர்.

## இரண்டாம் பிரிவு

ஸ்ரீராமன் மீண்டும் அயோத்திக்கு எழுந்தருளி முடிசூடி ராஜ்ய பரிபாலனம் செய்துகொண்டிருக்கும் நாளில், எல்லாரும் அவனது நற்குணங்களைப்பலவகையாகப் போற்றிப் புகழ்ந்தனர், ஆயினும் தன்னை இகழ்ந்து யாரேனும் கூறுவார் உண்டோ என்பதையும் அறிய விரும்பினான். இரவில் நகரசோதனை செய்வார் மூலம், ஒரு வண்ணான் சொன்ன வார்த்தையைச் செவி

யுற்றுன். அந்த அவச்சொல்லுக்குப் பரிகாரமாக ஏதேனும் செய்யத் திருவுளம் கொண்டான்.

அப்போது சீதாபிராட்டி திருவயிறு [கர்ப்பம்] வாய்த்திருந்தாள். அதையிட்டு அவளுக்கு விருப்பானதைக் கேட்பது போல ஸ்ரீராமன் 'நீ ஆசைப்படுவது என்ன?' என்று கேட்கிறுன்: ''அபத்ய லாபோ வைதேஹி மமாயம் ஸமுபஸ்திதா கிமேச்சஸி ஸகாமா த்வம் ப்ரூஹி ஸர்வம் வராநநே.''

அறுபதினுயிரம் ஆண்டு மலடு கிடந்து வருந்திப் பெற்ற என் தந்தையைப் போலல்லாமல், எளிதாகவே எனக்கு புத்திரப் பேறு கிட்டிற்று: அவசியம் அனுபவித்தல்லது தரிக்க வொண்ணுத ஆசையோடு கூடியிருக்கும் நீ எதை விரும்புகிறுய்? உன் உள்ளத்தில் ஓடுகிறதைச் சொல்வாய் என்ன,

**''தபோ வநானி, புண்யானி த்ரஷ்டும் இச்சாமி ராகவ**
**கங்கா தீர நிவிஷ்டாநி ருஷீணும் புண்ய கர்மணும்**
**பலமூலாசிநா வீர பாத மூலேஷு வர்த்திதும்**
**ஏஷமே பரம: காம:''**

கிழங்கு கனி சாப்பிட்டு, சத்வகுணமுள்ள ரிஷிகள் திருவடி நிழலில் ஒதுங்கி, கங்கைக் கரையில் உள்ள தபோவனங்களைக் காண விரும்புகிறேன். இதுவே என் விருப்பம்:'' என்று கூறினுள் சீதை:

தன் திருவுளக் கருத்தை நிறைவேற்றிக் கொள்ளத் தக்க சமயம் இதுவே எனக் கருதி, ஸ்ரீராமன், லக்ஷ்மணனை அழைத்து, அவளைக் காட்டில் கொண்டு விட்டு வருமாறு பணித்தான். லக்ஷ்மணனும் ஸ்ரீராமனின் ஆணையை மீற மாட்டாமல், சீதையைத் தேரில் ஏற்றி, வனத்தில் கொண்டு போய் விட்டு, ஸ்ரீராமனின் கருத்தையும் அவளுக்குத் தெரிவித்து, அயோத்திக்குத் திரும்பி விட்டான். ராமனின் கருத்தைக் கேட்ட போது அவள் துடிதுடித்துப் பிராணனை விட்டிருக்க வேண்டும்; அப்படியிருந்தும் ஸ்ரீராமனுடைய எண்ணத்தைப் பின்பற்றி, அவன் இட்ட வழக்காய் இருக்கவேண்டிய பாரதந்தர்யமுள்ளவள்; தன் உயிரை மாய்த்துக் கொள்ளவும் உரிமை அற்றவள்; **மாயும் வகையறியேன்; வல்வினையேன் பெண் பிறந்தே''** என்கிறுர் பெண்மை அடைந்து பசும் நம்மாழ்வார்,

இலங்கையில் சிறையிலிருந்த போது, ஸ்ரீராமனுக்காகவே தான் உயிர் தரித்திருப்பதாக பிராட்டி திருவடியினிடம் (அநுமானிடம்) சொல்லியிருக்கிறாள். **"ந சாஸ்ய மாதா நபிதாச நாந்யஸ்நேஹாத் விசிஷ்டோஸ்திமயா ஸமோவா"** என்கிற ச்லோகத்தாலே "ஒருவனுக்கு மாதா என்றும் பிதா என்றும் புத்திரன் என்றும் பத்நி என்றும் இப்படிப் பலரிடம் அன்பு பல படியாகப் பிரிந்திருக்கும். ராமனோ எனில் எல்லோரிடமும் உள்ள அன்மையும் ஒருமடை செய்து என் ஒருத்தியிடமே வைத்திருப்பவர். அவர், ஸமுத்திரத்தில் அணைகட்டி, லங்கைக்கு வந்து இராவணனைக் கொன்று என்னை மீட்டுப்போக வரும்போது, நான் அங்கு உயிருடன் இல்லையென்றால் அவர் மனம் என்ன பாடும்படும்? ஆகையால் அவருக்காகவே நான் பிராணனை விடாமல் பாடுபட்டுத் தரித்திருக்கிறேன்" என்று அங்கே அநுமானிடம் சொல்லியிருக்கிறாள் சீதை.

ஆனால் இப்போதோ அந்த ராமனே என்னை வேண்டாமென்று த்யஜித்திருக்கும் (துறந்த) போது, நான் உயிரை விட்டு விடலாம்; ஆனால் ரகுகுலத்தின் கரு என் வயிற்றில் இருப்பதனால் அதற்கு அழிவு ஏற்படக் கூடாது என்பதற்காகவே நான் இப்போது உயிர் தரித்திருக்க வேண்டியுள்ளது.

**நகல் வத்யைவ ஸௌமித்ரே ஜீவிதம் ஜாஹ்நவி ஜலே |**
**த்யஜேயம் ராகவம் வம்சே பர்துர் மா பரிஹாஸ்யதி லக்ஷ்மண ॥**

ஸ்ரீராமபிரானுடைய திருவம்சம் அழியவொண்ணாது என்று நான் உயிர் விடாமல் இருக்கிறேன். இல்லை எனில் இப்போதே கங்கா ஜலத்தில் உயிரை விடுவேன்; ராமனுக்கு பிராட்டியனிடம் அன்பு இல்லை; துறந்து விட்டான்; இருந்தாலும், அவன் வம்சத்தில் அவன் ப்ரீதி வைத்திருப்பதால் அதற்குக் கேடு வரக் கூடாது என்று உயிர் வைத்திருந்தாள்.

**ஆற்றாமையின் கனத்தாலே முடிந்து பிழைக்கை தேட்டமாக நிற்கச் செய்தேயும் அது செய்யமாட்டாதே பெருமாள் நினைவைப் பின் சென்று, தன் பிராணனை நோக்கிக் கொண்டிருக்க வேண்டும் படியான பாரதந்த்ர்யத்தையிறே ப்ரகாசிப்பித்தது"** என்பது மணவாள மாமுனியின் வாக்யம்.

குசலவர்கள் பிறப்பதில் ஸ்ரீராமனுக்குப் பிரியம். அந்த அவர் எண்ணத்தை **"அபத்யலாபாலைவதேஹி"** என்கிற ச்லோகத்திலே

ராமன் வெளியிட்டிருக்கிறான். அதையால் ''பெருமாள் நினைவை பின் சென்று'' தன் உயிரை விடவில்லை.

ஆனால் குசலவர் பிறந்த பிறகு சீதை தன் உயிரை விட்டிருக்கலாமே, ஏன் அப்படிச் செய்யவில்லை?

**பதிர்ஹி தைவதம் நார்யா: பதிர்பதி பதிர்கதி: |**
**பிராணைர் அபி ப்ரியம் தஸ்மாத் பர்த்து : கார்யம் விசேஷத: |**
**பாலயந்தீ ஹரேர் பாவம் பத்நீ பகவதோஹ்யஹம்'' |**

என்று பிராட்டியே சொல்லியிருக்கிறாள்.

கட்டில் வைத்தபோதும், காட்டில் விட்டபோதும் வேற்றுமை பாராது, பத்னீத்வத்துக்குச் சேர தன் பாரதந்தர்யத்தையே பிராட்டி வெளியிட்டிருக்கிறாள். பர்த்தாவின் நினைவை அநுசரித்து நடப்பது தான் பதிவ்ரதா ஸ்திரீயின் லக்ஷணம்.

கணவன் வெறுத்த அளவிலும் மனத்தில் தாபம்—அதாவது வருத்தமில்லாமல் இருப்பது உசிதமா? அவள் துயர் அடையவில்லையா? சாதாரணப் பெண்ணாக இருந்தால் இந்த நிலையில் கணவனை எவ்வளவு வைது பேச நேர்ந்திருக்கும்? சீதைக்குத் தாபம் இல்லை என்பதில்லை. அவளுக்கு மிகுந்த வருத்தம் இருக்கவே செய்தது. இருந்தாலும் ராமன் நினைவை அநுசரித்தே நடப்பதுதான் 'பாரதந்த்ரிய ஸ்வரூபம்' என்று இருந்தாள். இந்த நிலையில் பிராட்டி உயிரை வைத்திருந்ததே அவள் முடிந்ததற்கு சமானம் தான். தன் பர்த்தாவின் ப்ரீதியை அநுசரித்து நடக்க வேண்டும் என்று இருந்தாள். இப்படி பத்நீத்வ பாரதந்தர்யத்தை இந்த இரண்டாவது பிரிவில் நன்றாக வெளியிட்டுக் காட்டியிருக்கிறாள் சீதை. பகவானுடைய திருவுளப்பாங்கிற்கு ஏற்ப நடப்பதே பாரதந்தர்யமுள்ள சேதனன் ஸ்வரூபம்.

## மூன்றாம் பிரிவு

பெரிய பிராட்டி பகவான் ஒருவனுக்கே தான் உரியவள் என்கிற 'அநந்யார்ஹத்வத்தை' இந்த மூன்றாம் பிரிவினால் வெளியிட்டுக் காட்டியிருக்கிறாள். '**அநந்யா ராகவேணாஹம்**'' என்று சீதாபிராட்டி தன்னை ஸ்ரீராகவனுக்கே உரியவளாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாள். ஸ்ரீராமனும் ''**அநந்யா ஹி மயா சீதா**'' என்று சீதை தனக்கே உரியவள் என்று சொல்லியிருக்கிறான். இதையே நிரூபித்துக் காட்டியிருக்கிறாள் சீதை தனது மூன்றாம் பிரிவினால்.

ஸ்ரீராமன் அஸ்வமேத யாகம் செய்கிறான். குசலவர்கள் ஸ்ரீராமனின் புத்திரர்கள். ஸ்ரீவால்மீகி ரிஷியின் நியமனப்படி அயோத்தி வீதியில் ஸ்ரீராமாயணத்தை அழகாகப் பாடிச்செல்கிறார்கள். இதைக்கேட்ட ஸ்ரீராமன் அவர்களை மறுநாள் தன் அரண்மனை ராஜ சபைக்கு வந்து பாடும்படி சொல்லுகிறான். ஸ்ரீராமன் சீதையின் சரித்திரம் என்றே உகந்து ஸ்ரீராமாயணத்தைக் கேட்க ஆவலுறுகிறான். அப்படியே குசலவர்கள் மறுநாள் ராஜ சபைக்கு வந்து ஸ்ரீராமாயணத்தை வெகு அழகாக கானம் பண்ணுகிறார்கள்.

அதைக் கேட்கும்போது ராமன் திருவுள்ளம் சீதையிடமே சுற்றிச் சுழல்கிறது. சீதை அந்த ராஜசபைக்கு வந்து தான் பரிசுத்தமானவள் என்பதை மறுபடி நிரூபித்தால் அவளைத்தான் ஏற்றுக் கொள்வதாக வால்மீகிக்குச் சொல்லி அனுப்புகிறான். வால்மீகியும அவ்வண்ணமே சீதையை ராமனின் சபைக்கு அழைத்து வந்து பலபடியாக சீதையின் பரிசுத்த நிலையை எடுத்துச் சொல்லுகிறார்.

அப்போது ஸ்ரீராமன் "எனக்கும் சீதை தூய்மையானவள் என்பது தெரியும்; மேலும் ஒருவிதமான குற்றமும் இல்லாதவள் என்று ரிஷி சொன்னதே போதும்; இருந்தாலும் இந்த சபையிலே, உலகத்தார் அறியும்படி சத்தியம் பண்ணி. இத்திரளிலே தன் சுத்தியை வெளியிடுவாளாக" என்றான். ஸ்ரீராமனுடைய இந்த வார்த்தையைக் கேட்டதும், பெருந்துயர் அடைந்து, கண்ணும் கண்ணீருமாய், கவிழ் தலையிட்டு தன் தாயான பூமிப்பிராட்டியைக் குறித்து,

"யதாஹம் ராகவாதந்யம் மநஸாபி நசிந்தயே,
ததாமே மாதவீ தேவீ விவரம் தாது மர்ஹதி
மநஸா கர்மணா வாசா யதா ராமம் ஸமர்ததயே-
ததாமே மாதவீ தேவீ விவரம் தாதுமர்ஹதி !
யதைதத் ஸத்யமுக்தம்மே வேத்மி ராமாத்பரம் நச
ததாமே மாதவீ தேவீ விவரம் தாது மர்ஹதி

என்று சபதம் பண்ணினாள்.

ஸ்திரீகள் கஷ்டம் வரும்போது தங்கள் தாயை நினைத்து 'அம்மா' என்று அழைத்து துக்கப்படுவார்கள். அதேபோல, சீதாபிராட்டியும் தனக்கு பொறுக்க முடியாத பரிபவம் ஏற்பட்

டிருக்கும் சமயத்தில், பூமியிலிருந்து தோன்றினவளாகையினால் தன் மாதாவான பூமி தேவியைக் குறித்து 'ஓ' என்று அலறி பயங்கரமான ப்ரதிஜ்ஞையைச் செய்கிறாள்.

''என் தாயே! பூமி தேவியே! நீதான் இந்த ஆபத்தான சமயத்தில் என்னைக் காப்பாற்ற வேண்டும். நான் மனத்தாலும் கூட ராமனைத் தவிர வேறே ஓர் புருஷனை நினையாதிருப்பது உண்மையாகில், தாயே! நீயே வந்து அதை இந்த சபையில் நிரூபிக்க வேண்டும். 'என் பர்த்தா ராமனைத்தவிர வேறு மேலான தெய்வம் எனக்கு இல்லை என்று நான் நினைத்திருப்பது உண்மையானால் தாயே! நீயே வந்து இந்தசபையில் அதை நிரூபிக்க வேண்டும்' என்று இப்படி பலபடியாக சபதத்தைச் செய்கிறாள்.

அங்கு அப்போதே பூமி பிளந்தது; அதிலிருந்து பூதேவி ஓர் திவ்ய சிம்மாசனத்தைக் கையில் ஏந்தி, தோன்றினாள். உளம் உவந்து வரவேற்பதாகத் தன் இரு கைகளாலும் ஸீதாதேவியை எடுத்து, அந்த திவ்ய சிம்மாஸனத்தில் எழுந்தருளச்செய்து. பூமிக்குள் சீதையுடன் மறைந்தாள். தேவர்கள் துந்துபி வாத்தியங்கள் வாசித்து, பூ மாரி பொழிந்தார்கள்,

இந்தப் பிரிவினால் பிராட்டியான சீதாதேவி, தான் பகவான் ஒருவனுக்கே உரியவள் என்கிற, அநந்யார்ஹத்வத்தை வெளியிட்டிருக்கிறாள்.

இப்படி ஸ்ரீராமாயணத்தில் மூன்று பிரிவுகளைக்கொண்டு புருஷகாரபூதையான பிராட்டி சீதையாக அவதரித்து தனக்கு புருஷகாரம் செய்யும்போது, அவசியமான மூன்று குணங்களும்' (கிருபை, பாரதந்தர்யம், அநந்யார்ஹத்வம்) பூரணமாக இருப்பதை நன்கு வெளியிட்டுக்காட்டியிருக்கிறாள் என்பதை நாம் தெளியலாம்.

பெரிய பிராட்டியான ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கேயுள்ள, தனிச்சிறப்பான தர்மம் புருஷகாரம் என்பதையும், அந்த புருஷகாரத்துக்கு வேண்டிய முக்கிய குணங்களான க்ருபையும் பாரதந்தர்யமும் அநந்யார்ஹத்வமும் பூரணமாகப் பெற்றவள் என்பதையும் முதல் பகுதியில் தெளிவுறக் கண்டோம்.

அப்படி தனக்குள்ள தர்மத்தை ஸ்ரீ ராமாயணத்திலேயே அநேக இடங்களில் சீதா பிராட்டி ஆசரித்துக் காட்டியிருப்பதை இப்பகுதியில் காணலாம்

லக்ஷ்மணனுக்கு

ஸ்ரீ ராமன் லக்ஷ்மணனைத் தன்னுடன் காட்டுக்கு அழைத்துப் போக முதலில் பிரியப்படவில்லை. அப்போது லக்ஷ்மணன் சீதா பிராட்டியை புருஷகாரமாகக் கொண்டு பகவானின் திருவடிகளைப் பற்றித்தன் அபீஷ்டம் (விருப்பம்) நிறைவேறப் பெற்றிருக்கிறான்.

**ஸ ப்ராது ஶ்சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந: |**
**ஸீதாம் உவாச அதிசயசா ராகவஞ்ச மஹாவ்ரதம் ॥**

[மிக்க புகழ்பெற்ற லக்ஷ்மணன், தமையன் திருவடிகளை கெட்டியாகப் பிடித்து பிராட்டியை (புருஷ்காரமாக) முன்னிட்டு ஸத்யவிரதனை (உபாயமான) பெருமாளைப் பார்த்துச்சொன்னார்.

என்கிற சுலோகத்தாலே லக்ஷ்மணன் சீதாதேவியை புருஷ காரமாகக் கொண்டு ஸ்ரீராமனை சரணம் பற்றியிருக்கிறான். அப்படி பற்றினபடியாலே தமது அபீஷ்டமான இடைவிடாத ராம கைங்கர்யத்தைப் பெற்று நல்வாழ்வு வாழ்ந்தார் என அறிகிறோம்.

மற்றும். அதேபோல பஞ்சவடியில் ஒரு நிகழ்ச்சியைக் காணலாம். ''நீரும் நிழலும் உள்ள, உனக்குப் பிடித்தவான ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து, அங்கே ஒரு பர்ணசாலை (ஓலை வீடு) கட்டு'' என்கிறான் ராமன்;

**ஏவமுக்தஸ்து ராமேண லக்ஷ்மண: ஸம்யதாஞ்சலி; |**
**ஸீதாஸமக்ஷம் ககுத்ஸ்தம் இதம் வசநமப்ரவீத் ॥**

[ராமனால் ஏவப்பெற்ற லக்ஷ்மணனே கைகூப்பி, ஸீதையின் முன்னிலையில் அவளைப் புருஷகாரமாகப்பற்றி ராமனைக் குறித்து, இவ்வார்த்தையைச் சொன்னார்.]

**பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷசதம் ஸ்திதே |**
**ஸ்வயம்து ருசிரே தேசே க்ரியதாம் இதி மாம்வத ॥**

[ஸ்ரீராமா! நீர் ஆயிரமாண்டுகள் உள்ளவரையும் நான் உமக்கு பரதந்த்ரனாகவே இருக்கிறேன்: தேவரீரே திருவுளம் உகக்கும் இடத்தில் [பர்ணசாலை] கட்டப்படட்டும் என்று ஏவிக் கொள்ளவேணும்[

''உனக்கு இஷ்டமான இடத்தைப் பார்த்துப் பர்ணசாலை கட்டுக'' என்று ராமன் சொன்னது லக்ஷ்மணனுக்கு வருத்தத்தை உண்டாக்கியிருக்கிறது. அடியவனுக்கு என்று தனி இஷ்டம் (ப்ரீதி) உண்டோ? பகவானின் (எஜமானனுடைய) இஷ்டமே தாஸனுடைய ப்ரீதி. அப்படியிருக்க, ''உனக்குப் பிடித்தமான இடம்'' என்று ராமன் சொன்ன உடனேயே பாரதந்தர்யமே இயல்பான அடியேன் தலையில் ஸ்வாதந்தர்யத்தை வைக்கிறாரே, ஒரு வேளை இவ்வழியால் அடியேனை விலக்கப்பார்க்கிறாரோ என்று அச்சமும் வருத்தமும் உண்டாகி, உடனே பிராட்டியை புருஷகாரமாகப் பற்றி ராமனிடம் பிரார்த்திக்கிறார் லக்ஷ்மணன்.

ஒரு பதிவிரதா ஸ்திரீ தனது கணவனைப் பார்த்து, ''இன்று என்ன சமையல் செய்வது? என்று கேட்டால், அதற்கு அவன் 'உனக்கு இஷ்டமானதைச் செய்'' என்று சொல்லி விட்டால், உத்தமப் பெண்மணியாயிருப்பவள் அதைக்கேட்டு உளம் தடுமாறி நடுங்கவேண்டும்; ஏனெனில் தனக்கு என அவளுக்கு ஒரு தனி பிரியம் உண்டா? பர்த்தாவின் இஷ்டமே தன் இஷ்டமாயிருப்பவள் அன்றோ அவள்.

### குகப்பெருமாளுக்கு

வேடச் சாதியான குகனும் முதன் முதலில்சீதையின் கடாக்ஷம் பெற்றதனால்தான் ஸ்ரீராமன் அந்தக் கீழ்க்குலத்தோன் குகனை

**ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது
இரங்கி மற்றவர்க்கு இன்னருள் சுரந்து
மாழை மான் மட நோக்கி உன்தோழி, உம்பி எம்பி
என்றொழிந்தலை உகந்து தோழன் நீ எனக்கு**

என்னும்படியான அவ்வளவு நட்பு கொண்டான்.

### மகாராஜர்க்கு [சுக்ரீவனுக்கு]

சீதையை ராவணன் எடுத்துச் செல்லும்போது, ரிச்யமூகமலையில், சுக்ரீவன் இருந்த இடத்தில், சீதை தன் அணிகளில் சிலவற்றை. தன் மேலாடையில் முடிந்து, கீழே பொகட்டு சுக்ரீவனையும் உடனிருந்த வானரர்களையும் கண்குளிர நோக்கினாள். அதனால்தான் ஸ்ரீராமன் சுக்ரீவன் இருக்குமிடம் தேடிச் சென்று அவனது குறைகளைப் போக்கி, அவனுக்கு நிறைகளை அருளினான். லக்ஷ்மீகடாக்ஷம் பெற்றவர்களை, பகவான் தேடிச் சென்று

அவர்களுக்கு நன்மையைச் செய்கிறுன் என்பது தெளிவாகிறது. இப்படி அனுகூலர்களுக்கு மட்டுமின்றி பிரதிகூலர்க்கும் பிராட்டி புருஷகாரம் செய்துள்ளதையும் நாம் காணலாம்.

**காகாசுரனுக்கு**

பிராட்டியிடம் நேருக்கு நேராகக் கொடிய அபராதத்தை (தீமை) செய்த காகாசுரனை (ஜயந்தனை) ஸீதை தன் க்ருபை காரண மாகவே, அவனுக்கு புருஷகாரமாக விளங்கி, அவன் உயிரை ஸ்ரீராமனின் அஸ்திரத்திலிருந்து மீட்டாள்.

ஒரு சமயம் சீதையும் ராமனும் சித்திரகூடத்தில்தனித்து இருந்த போது, ஸ்ரீராமன் சீதையின் மடியில் முடியை வைத்துப்படுத்துக் கண்வளர்ந்தருளுகிறுன். அப்போது, மாமிச உணவில் விருப்பம் கொண்ட காகம் அங்கு வந்து சீதையின் மார்பகத்தில் தன் அலகி ஞல் குத்திப் புண் உண்டாக்கியது. இருந்தபடியே அதை ஒரு மண்ணுங்கட்டியால் ஓட்டினுள். அப்போது தன் மடியில் உறங்கு கிற ஸ்ரீராமனின் துயிலுக்கு இடையூறு நேரலாகாது என்று சீதை அந்தப் புண்ணிஞல் ஏற்பட்ட நோயை சகித்துக் கொண்டு வாளா இருந்து விட்டாள்,

அந்த சமயத்தில் காகம் அங்கே சுற்றிக் கொண்டிருந்தது. மறுபடி வந்து திருமேனியைத்தீண்டித் துன்புறுத்தியது, அச்சமயம் மேல்ஆடை சிறிது விலகியது. கோப மூட்டப்பட்டுக் கிளைத்திருந்த சீதையைக்கண்டு ராமன் ஏளனப் புன்னகை புரிந்தான். சீதை வெட்கித் தலைகவிழ்ந்தாள். (ஒரு அற்பப்பறவையிடமிருந்து கூட ஒரு ஜீவன் பகவானின் அருள் இன்றித் தன்னைக் காத்துக் கொள்ள இயலாது என்பதை இது காட்டுகிறது.) ராமன் மடி யில் சீதை உட்கார்ந்தாள்: ராமனும் தேற்றினுன்; காகமும் மறைந்திருந்தது.

மறுபடியும் ராமன் ஸீதையின் மடியில் தலையை வைத்துக் கண் வளர்ந்தருளினுன். மறுபடி காகம் வந்து முன்னிலும் அதிக மாக முரட்டுத்தனமாக பல தடவை குத்தி அவளுக்குப் புண்ணை உண்டாக்கியது. புண்ணிலிருந்து ரத்தத்துளி சிதறி ராமன் திரு மேனியை நனைத்தது.

வாயஸேந ததஸ்தேந பலவத் க்லிச்யமாநயா
ஸமயா போதித: ஸ்ரீமாந் ஸுகஸுப்த : பரந்தப:

(உறங்கும் போதே எதிரிகள் மண்ணுண்ணும் படியான திரு மேனி அழகில் ஈடுபட்டிருந்த என்னல், காகத்தின் துன்புறுத்தா லால் எழுப்பப்பட்டார்.

நம் போல்வார் படுத்துறங்கும் போது, நமது சரீர அவ லக்ஷணங்கள் (உடல் கோணல்கள்) அனைத்தும் நன்கு வெளிப் படும். ஆனால் புருஷோத்தமன் எந்த நிலையிலும் அழகு மிக்கவனு கவே விளங்குபவன்; எம்பெருமானின் மற்ற நிலைகளைவிட 'ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்'' என்றும் 'கிடந்ததோர் கிடக்கை' என் றும் ஈடுபடுத்தும் எழில் வாய்ந்தது அவனது சயனத்திருக் கோலம். அவன் கிடையழகில் அவனது அனைத்து அழகும் சேவித்து அனுபவிக்கலாயிருக்கும்.

ஆழ்வார்களும் ஆசார்யர்களும் கோவிலில் பகவானின் கிடை யழகில்தான் மிகவும் ஈடுபட்டிருக்கிருர்கள் ஸ்ரீரங்கம் என்கிற திவ்ய தேசத்தில் சயனித்திருக்கும் பெரிய பெருமாளை சேவித்த திருப்பாணாழ்வார்.

**''என் அமுதினைக் கண்ட கண்கள் மன்ருென்றினைக் காணுவே''**
என்றும்

**''குடதிசை முடியை வைத்து குணதிசை பாதம் நீட்டி**
**வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி**
**கடல் நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலுமாகண்டு**
**உடல் எனக்கு உருகுமாலோ என் செய்கேன் உலகத்தீரே**
என்று தொண்டரப்பொடிகளும் அனுபவித்திருக்கிருர்கள்.

இயல்பாகவே வெகு அழகன் ராமன். தன் மடியில் அவன் படுத் துறங்கும் போது, அந்த அழகு இன்னும் பரம போக்யமாயிருந் தது பிராட்டிக்கு.

ரத்தத்தால் நனைக்கப்பட்டு, சீதையால் எழுப்பப்பட்ட ராமன் கண் விழித்து ஸீதையின் மார்பகத்தில் புண்ணையும் காகத்தின் மூக்கில் இரத்தத்தையும் பார்த்தான். பகவானுக்கு அடக்க முடி யாத சீற்றம் பிறந்தது. காகம் பூமிக்குள் சென்று தலைமறைந்து தப்ப முயன்றது.. ராமன் சீறிச் சிவந்து ஒரு தர்ப்பப்புல்லை எடுத்து மந்தரித்து, ப்ரஹ்மாஸ்த்ரப் பிரயோகம் (பிரமன்கணை) சய்து காகத்தின் மீது ஏவி விட்டான். அந்த அஸ்த்ரம் எரியும்

தழலைச் சொரிந்து கொண்டு, அந்தக் காகத்தைப் பின் தொடர்ந்தது. ஆகாயமெங்கும் காகம் ஓடித் தப்ப முயன்ற முயற்சி பலிக்கவில்லை; மூன்று உலகங்களிலுள்ள உறவினர்; தேவர் ரிஷிகள் உட்பட யாரும் புகல் அளிக்க மறுத்து விட்டனர். ராம பயத்தால் அனைவரும் ஒதுங்கி விட்டனர், முடிவில் புறப்பட்ட இடத்துக்கே வேறு புகல் இன்றி வந்து விழுந்தது.

**ஸபித்ராச பரித்யக்த : ஸுரைச்ச மஹிர்ஷிபி :**
**திரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத :**
**ஸதம் நிபதிதம் பூமௌ சரண்யச் சரணாகதம்**
**வதார்ஹமபி காகுத்ஸ்த : க்ருபயா பர்யபாலயத்**

என்று தரையில் விழுந்து வேறு புகலற்றுக் கிடந்த அக்காகத்தை ராமன் வதத்துக்கு உரியதாயினும் க்ருபயா (சீதை காரணமாக எழுந்த கருணையால்) காப்பாற்றினன்.

சீதையின் காரணமாய் எழுந்த ராமனின் கருணை என்பது எப்படி?

**புரத: பதிதம் தேவீ சரண்யாம் வாயஸம் ததா**
**தச்சிர: பாதயோஸ் தஸ்ய யோஜயாமாஸ ஜாநகீ**
**தம் உத்தாப்ய கரேணாத க்ருபாபியூஷ ஸாகர**
**ரரக்ஷ ராமோ குணவாந் வாயஸம் தயயைக்ஷத**

என்று ஜானகிதேவி அப்போது முன்னிலையில் விழுந்த காகத்தைப் பார்த்து.

**ப்ராண ஸம்சய மாபந்நம் த்ருஷ்ட்வா ஸீதாதவாயஸம்**
**த்ராஹி த்ராஹீதி பர்த்தாரம் உவாச தயயாவிபும்**

உயிர் உண்டோ இல்லையோ என ஐயுறும் ஆபத்தான நிலையில் காகத்தைக் கண்ட ஸீதை, கருணைமேலிட்டு, தனக்கு வாய் கூசும் படியான கொடுமையைச் சற்றுமுன் செய்தவனாயினும் அவன் துயர்கண்டு ஐயோ என இரங்கி, பெருமாளுடைய திருவடிகளில், அதன் தலையை நேராக இருக்கும்படி சேர்த்து வைத்தாள். பின்பு கருணையம் கடலான ராமன் அந்தக் காகத்தை தன் கையால் எடுத்து ரக்ஷித்தார். காகத்தை அருள் கூர்ந்து நோக்கினார்.

''இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது; அதில்லாமையாலே ராவணன் மாண்டான்'' என்பது லோகாசார்யன் வார்த்தை.

## பிராட்டி முன்னிலை

இங்கே நாம் சற்று ஊன்றிக் கவனிக்க வேண்டும்; இராவணனுக்குக் குற்றம் அதிகமா, காகாசுரனுக்கு தோஷம் அதிகமா, என்பதை ஆராயவேண்டும். இராவணன் சீதையை எடுத்துச் சென்றானேயொழிய அவள் இஷ்டத்துக்கு மாறாக அவளை அவன் தீண்டித் துன்புறுத்தவில்லை. காகமோ எனில் தேவியின் திருமேனியில் தன் மூக்கினால்குத்திப் புண்படுத்தியிருக்கிறது. இராவணன் முதற்போரில் எல்லாப்படைகளும், போர்க்கலன்களும் அழிந்து கையில் கணையும் இன்றி வெறும் தரையில் போக்கற்று நின்றான். காகமும் அதே போன்று வேறு புகலின்றி நிற்க இடமில்லாமல் ராமபாணம் துரத்த ராமன் முன்வந்து விழுந்தது; இராமன் முன்னிலையில், இவ்வகையில் இவ்விருவர் நிலையும் ஒத்திருக்க ராவணன் குறைந்த குற்ற முடையவனாயிருந்தும் முடிவில் தலையறுப்புண்டு மாண்டான். இதற்குக் காரணம் யாது? பிராட்டி ஸந்நிதி (முன்னிலை) இல்லாமையே. காகத்துக்கு குற்றம் நிறைந்திருந்தும், பிராட்டியை அக்காகம் புகலாகப் பற்றாமலிருந்தும், பிராட்டியின் முன்னிலை [இராமன் அருகில்] இருந்ததால் தாயின் கருணைக்கு அது இலக்காகி தலைதப்பியது.

## பிரம்மாஸ்திரம் துரத்தியது

சிலருக்கு இவ்விடத்தில் ஓர் ஐயம் எழக்கூடும். அதாவது பிரம்ஹமாஸ்திரம் மூன்று உலகமும் சுற்றும் வரையில் அவனைக் கொல்லாமல் பின்னால் சென்று துரத்தியது என்பது எப்படி? என்பதே

இதற்கு நம் ஆசார்யர்கள் வெகு அழகாகப் பதில் சொல்லியிருக்கிறார்கள். "**மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந**" என்பது ஸ்ரீராமன் வார்த்தை ஒருவன் உண்மை நட்புடன் வராவிட்டாலும், நண்பனைப்போல் வந்தாலும் போதும். அவனை நான் தோஷமுள்ளவனாயினும் விடுவதில்லை' என்கிறான் பகவான்.

ராமன் சுபாவம் இது, "**யச்சீலோ ஸ்வாமி தச்சீலோ தாஸ**" என்பது ஒரு பழமொழி. ஸ்வாமி எப்படியோ அப்படியே தாசன் என்பது இதன் பொருள்.பகவானுடைய ஆயுதங்களும் அப்படியே. ராமனின் பிரஹ்மாஸ்திரம் காகத்தைத் துரத்தும்போது, முன்னே விரைந்துசெல்லும் காகம் தன்பின் வரும் அஸ்த்ரம் எவ்வளவு தூரத்தில் வருகிறது என்பதை திரும்பி நின்று பார்க்குமாம்; அப்போது அந்த அஸ்திரமும் ஒருக்கால் ராமன் இருக்கும் திசை

நோக்கி அக்காகாசுரன் ஓர் அஞ்சலி (கை கூப்புதல்)யோ, சரணுகதியோ பாதங்களில் விழுதல்) செய்து பிழைத்துப்போனாலும் போகட்டுமே என்று அந்த அஸ்த்ரமும் அவனைத் துரத்தாமல் நின்று விடுமாம். இப்படியே அந்த அஸ்த்ரம் காகாசுரனை ஸ்ரீராமன் இருக்கும் இடம் வரை துரத்திக் கொணர்ந்தது என்று ஆசார்யர்கள் அருளிச் செய்வர்.

## அரக்கிகளுக்கு அபயம்

அடுத்து, இதே போன்று ஸ்ரீ ராமாயணத்தின் மற்றோரிடத்தில் சீதா பிராட்டி தன்னிடம் கொடுமைகளை இழைத்தவர்கள் தன்னைத் தாள் பற்றிக் கேட்காமலிருக்கும்போதே அவர்கள் மீது கருணை கொண்டு அவர்களைக் காப்பாற்றியிருப்பதையும நாம் காணலாம்

சீதை இலங்கையில் அசோக வனத்தில் சிறை பட்டிருக்கும் போது, ஏகாக்ஷீ, ஏக கர்ணி முதலான அரக்கிகள் இராவணனால் ஏவப்பட்டு, இவளை வெகுவாகத் துன்புறுத்தி வந்திருக்கிறார்கள். இராவணன் போரில் மாண்டு, ஸ்ரீ ராமன் வெற்றித்திருவோடு விளங்கி நிற்கும் செய்தியை அனுமான் பிராட்டியிடம் வந்து தெரிவிக்கிறார், அப்போது பிராட்டி இந்த சந்தோஷச் செய்தியைக் கேட்டு, மகிழ்ச்சிப்பெருக்கால் வார்த்தை ஒன்றும் சொல்லமாட்டாமல் சிறிது காலம் மௌனமாயிருந்தாள்.

அப்போது திருவடி (அனுமான்) ''அம்மா! இந்த சந்தோஷச் செய்தியைச் சொன்ன அடியேனிடம் ஒரு மாற்றமும் அருளிச் செய்யாமல், பேசாமலிருப்பது ஏன்? என்று கேட்கிறார்.

அதற்கு பிராட்டி, '' நீர் செய்த உபகாரத்துக்கு என்ன மறு உதவி செய்யலாம், தக்க பரிசு எதுவாக இருக்கும் என்று யோசிக்கிறேன் எதுவும் அதற்குத் தகுந்த உபகாரமாகத் தோன்றவில்லை'' என்று கூறினாள்.

இதைக் கேட்டதும், ''இதுதான் தக்க சமயம் என்று அறிந்து ''தாயே! தேவரீர் அடியேனுக்குப் பிரதி உபகாரம் செய்ய நினைத்தீராகில், இதோ இங்கே இருக்கும் இந்தக் கொடிய கோர உருவம் தாங்கிய அரக்கிகளை சித்திரவதை செய்ய அனுமதி தரவேண்டும். அவர்கள் நான் முன்பு இங்கு வந்தபோது, தேவரீரை கொடிய சொற்களாலும் செய்கைகளாலும் படுத்திய பாட்டுக்குப் பதிலாக, என் கைகளால் அறைந்து, பற்களால் கிழித்து,

கால்களால் உதைத்து, முஷ்டிகளால் குத்தி, அவர்களை அழித்து ஒழிக்க வேண்டும். இதுதான் தாங்கள் இச்சமயம் எனக்குத் தரக் கூடிய பொருத்தமான பரிசாகும். இவர்கள் மகாபாபிகள்; இவர் களைக் கொல்வதில் பாபமில்லை'' என்கிறார்.

அனுமனின் இந்த வார்த்தையைச் செவி கொடுத்துக் கேட்க வும் சகிக்காமல் பிராட்டி, ''வாநர! நீர் இவர்கள் இப்போது இருக்கும் நிலையைப் பார்க்கவில்லையே; உம்மைக் கண்ட உட னேயே அவர்கள் நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள்; நீர் அவர்களைக் கொல்வது சரியில்லை: அவர்கள் மீது தோஷமில்லை; யஜமானன் சொன்னதைக் கேட்டு கீழ்படிந்து அவர்கள் அதன்படிச் செய்தார் கள் என் வினைப்பயனை நான் அனுபவித்தேன்'' என்றாள் பிராட்டி.

இதைக் கேட்ட அனுமான் ''அவர்களை எப்படியும் சித்திர வதை செய்ய வேண்டும் என்று தோன்றி' தாயே! நீர் நினைக்கிற படி இவர்கள் குற்றமற்றவர்களல்லர்; கொடுமையானவர்களே. இராவணன் ஒன்று சொல்லுமுன் பத்து கொடுமைகளை இழைப்ப வர்கள் இவர்களைக் கொல்ல விரும்புகிறேன்' என்றார்.

அப்போது பிராட்டி,

**''அயம் வ்யாக்ர ஸமீபேது புராணோ தர்ம ஸம்ஸ்தித:**
**ரிக்ஷேண கீதாச்லோகோ மே தாந் நிபோத ப்லவங்கம:''**

புராதனமானதும், அறநெறி வழுவாகதுமான இந்த ச்லோ கம் ஒரு கரடியினால் ஒரு புலிக்கு மொழியப் பெற்றது; வானரரே அதை என்னிடமிருந்து நீர் கேட்பீராக!'' என்று கூறி, முன்னொரு நாள் காட்டில் வேங்கையால் துரத்தப் பெற்ற ஒரு வேடன் மர மொன்றில் ஏற, அம்மரத்தில் இருந்த கரடியைக்கண்டு அஞ்சி அதனிடம் சரண் புக, அப்போது அப்புலி வேடனைக் கீழே தள்ளுமாறு கரடியை வேண்டியது. கரடி மறுத்துவிட்டது. கரடி மரத்தில் உறங்கத் துவங்கியது. அப்போது கீழே இருந்த புலி வேடனை நோக்கி, ''கரடியைத் தள்ளிவிடு; உன்னை விட்டுவி விடுவேன்'' என்று கூறியது. வேடன் உடனே உறங்கும் கரடியைக் கீழே தள்ளி விட்டான். ஆனால், கரடி கீழே விழாமல் மரக் கிளையைப் பற்றிக்கொண்டு நின்றது. இதைக் புலி, உன்னைக் கீழே தள்ளிய வேடனை இப்போதாவது நீ வீழ்த்திவிடு என்று மன்றாடியது புலி 'தஞ்சமுற்றவனுக்கு எந்த நிலையிலும் தீங்கு புரியேன்' என்று கீழ்வரும் சுலோகத்தைக் கரடி கூறியதாகா

புராணக் கதை,

**''ந பர: பாபமாதத்தே பரேஷாம் பாப கர்மணும் |**
**ஸமயோ ரக்ஷிதவ்யஸ்து ஸந்தச்சாரித்ர பூஷணு ॥**

[ஒரு நல்லவன் பாவம் செய்யும் தீயவர்க்கும் தீங்கைச் செய்வதில்லை; நன்னெறியேதான் காக்கத் தக்கது. நல்லோர் நன்னடத்தையே அணியாகக் கொண்டவர்கள்.] மேலே கூறியபடி, மேற்கோள் காட்டி,

**பாபாநாம் வா சுபாநாம் வா வதார்ஹாணும் ப்லவங்கம |**
**கார்யம் கருணமார்யேண நகச்சிந்நாபராத்யதி ॥**
என்கிருள் பிராட்டி.

இந்த அழகான ச்லோகம் பிராட்டியின் சொரூபத்தை நன்கு நிரூபிப்பதாகும். இதன் கருத்து: ''வானரனே! நீர் சொல்லுகிறபடி: அந்த அரக்கிகள் பாபிகளாகவுமாம்; நான் சொல்லுகிறபடி சுபைகளாகவுமாம்; கொல்லுவதற்கு உரியவராகவுமாம்; எப்படியாயினும் அவர்கள், தங்களைக் காக்கும் இராவணனும் மாண்டு, அவர்கள் இப்போது இருக்கும் துர்கதியைப் பாராய், உயர்ந்தோர் கருணையே புரியக் கடவர்; எவரும் குற்றம் புரியாதவரில்லை. மேலும் சொல்லுகிருள்:

உலகத்தில் யார்தான் குற்றமில்லாதவர்கள்? மணல் சோற்றில் கல் ஆராய்வதுண்டோ? உம்மை உமது தலைவன் இவர்களை கொன்றுவரச் சொல்லவில்லையே, அப்படியிருக்க உமது யஜமானன் சொல்லாததைச் செய்ய முயல்கிறீரே, நீர் குற்றவாளியா? தங்கள் யஜமானின் சொன்னதைச் செய்த அவர்கள் குற்றவாளியா? நீரே கூறும். இது உமது முதல் குற்றம்,

மேலும் சொல்லுகிறேன்; ''என்னைப் பத்துமாத காலம் இலங்கையிலேயே சிறையிருக்கும்படி விட்டுவிட்டு, தன் கடமையில் நழுவியிருந்த இராமன் குற்றவாளியில்லையா?

அவருக்கு அறிவு ஆற்றல்களில் குறை உண்டோ? இருந்த இடத்திலிருந்தே ஒரு அஸ்திரத்தை ஏவியிருந்தால், ராவணனைக் கொன்று என்னையும் மீட்டிருக்க அவரால் முடியுமல்லவா? அப்படி செய்யாதது அவர் குற்றமல்லவா?

ஸ்வாமியின்மீது இத்தகைய குற்றத்தைச் சுமத்தும் நானும் ஒரு குற்றத்தைச் சுமத்தும் நானும் ஒரு குற்றவாளியே என்று

இப்படி பலபடியாகக் கூறி, உலகில் யார்தான் குற்றவாளியில்லை என்று கேள்வி எழுப்பி அந்த ராக்ஷஸிகள் தன்னைச் சரணம் பற்றுமல் இருக்கும் போதே அவர்கள் துர்க்கதி கண்டு இரங்கி தன் அருளாலேயே அவர்களை அனுமானிடமிருந்து அவள் காப்பாற்றி யிருக்கிறுள்.

**ராவணனுக்கு**

ராவணன் அசோகவனத்தில் சீதையிடம் வந்து சொல்லத் தகாத பல கொடிய வார்த்தைகளைக் கூறுகிறுன். பிராட்டி தனக்கு சக்தியிருந்தும் "பஸ்மீ பவ" (நீ சாம்பலாகக் கடவாய்) என்று அவனை சபிக்காமல், அவனையும் உயிரோடு விட்டிருக் கிறுள். தன்னுடைய பாரதந்தர்ய ஸ்வரூபத்துக்குச் சேர தன்னைத் தானே காத்துக்கொள்ள உரிமை பெற்றிருக்கவில்லை என்பதால் ராமன் மூலம் ஏற்படும் ரக்ஷணத்தையே எதிர்பார்த்திருந்தாள். ஆயினும், ராவணனும் திருந்தி வாழ்ந்து போகவேண்டும் என்று அவள் தாயுள்ளம் கருதுகிறது. அவள் தன் தேஜஸுக்குச் சேர "த்ரணமந்தரத: க்ருத்வா" (ஒருபுல்லை முன்னே போகட்டு) அவனுக்குப் பலபடியாக நல்லுபதேசம் செய்கிறுள்.

அவன் வணங்கலில் அரக்கனுகையாலே, ராமனைச் சரணமாகப் பற்றுக என்றால் அதற்கு அவன் எளிதில் இசையான் ஆகையாலே, "மித்ரம் ஒளபயிகம் கர்த்தும்" என்னும் சுலோகத்தாலே, ஸ்ரீராமனோடு தோழமை கொள்; நீ வாழ்ந்து போகலாம் என்று மிக சாதுர்யமாக, தாய் தன் பிள்ளைக்கு நல்லுரை கூறுமாபோல் உபதேசித்திருக்கிறுள். "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந" என்பது ஸ்ரீராமனின் கடற்கரை வார்த்தை. "மித்ரம் ஒளபயிகம் கர்த்தும்" என்பது இங்கு பிராட்டியின் வார்த்தை. இப்படி சேதனன் விஷயத்தில் இந்த திவ்யதம்பதிகளின் திருவுளமும், வாக்கும் ஒருபடிப் பட்டிருப்பதையும் நாம் அனுப விக்கலாம். ஆனுல் அவன் பாபம் அதைச் செவி ஏற்கவில்லை; அவனுக்கு சீதை அருளிய உபதேசம் பலிக்கவில்லை; ஆனுல் அப்போது சிம்சுபா மரத்தின் மீதிருந்து அந்த உபதேசத்தைக் கேட்டுக்கொண்டிருந்த அனுமானுக்குப் பலித்தது. துதோஹம்" என்று வந்தவர், "தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய" என்று தம்மைக் கூறிக்கொள்ளும்படியான தாஸ்ய ஸ்வரூபத்தைப் பெற்றுர்.

**விபீஷணனுக்கு**

விபீஷணன் பிராட்டி புருஷகாரம் பற்றியே நல்வாழ்வு பெற்றுன்; அவன் பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றியது எங் ஙனே என்னில், தன்னுடைய மனைவி, மகள் மூலமாக அசோக வனச் சிறையிலிருந்த பிராட்டிக்கு ஆறுதல் கூறி உதவிகள் செய்து, அவளுடைய அருளைப் பெற்றிருக்கிறுர். ஆகையால் தான் ஸ்ரீராமன், "வீடணற்கு வேறுகவே நல்லான்" என்னும் படி பகவதங்கீகாரம் பெற்றிருக்கிறுன்.

இப்படி லக்ஷ்மணன், குஹன், காகாசுரன், ராக்ஷஸிகள், விபீஷணன் ஆகியோர் பிராட்டியின் புருஷகாரத்தால் பயன் அடைந்திருக்கின்றனர் என்பதை ஸ்ரீராமாயணத்திலிருந்து நாம் நன்கு அறியலாம்.

# மூன்றும் பகுதி

ஸ்ரீராமாயண புருஷர்கள் ஸ்ரீராமன், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன் என்று நால்வர். இவர்கள் தசரத சக்ரவர்த்திக்கு புத்திரர்களாய்த் தோன்றி உலகுக்கு தலைக்கொரு தர்மமாகச் சிறப்பித்து நடத்திக் காட்டியிருக்கிறார்கள்.

## ஸாமான்யம்

ஸ்ரீராமன் உலகில்,'ஒருவன் சொல்லிற்று ஒருவன் கேட்பது'' என்னும் ஸாமான்ய தர்மத்தை, தந்தை சொல், தாயின் ஆணை, குருவின் கட்டளை, நண்பன் வேண்டுதல், மனைவியின் விருப்பம், தாசனின் வேண்டுதல் என்று இப்படி பிறர் சொல் கேட்டு நடப்பதையே சிறப்பித்துக் காட்டியிருக்கிறான், ''பித்ரு வாக்ய பரிபாலனம்'' அதில் பிரதானமாக விளங்கியது.

## விசேஷம்

லக்ஷ்மணனோ விசேஷ தர்மத்தில் ஊன்றி நின்றான். அதாவது பகவானுக்கு அடியவன் (சேஷபூதன்) இந்த ஜீவன் என்ற உண்மை நிலைக்குச்சேர ''ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும். நாம்'' என்று நம்மாழ்வார் பாரித்த படி ஸர்வதேச, ஸர்வகால, ஸர்வ அவஸ்தைகளிலும் எல்லா அடிமைகளையும் அவர் ஒருவரே பாரித்துக் கொண்டு, பகவானும் பிராட்டியுமாகிற ராமனுக்கும் சீதைக்கும் தொடர்ந்து அடிமை செய்தார். தன் வர்ண தர்மம், ஆசிரம தர்மம் இவைகளையும் நழுவ விட்டு தாஸ்யமே பிரதானமாக விளங்கினார்.

## விசேஷதரம்

பரதனோ, ஒரு ஜீவன் பகவானுக்குத் தானாக உகந்து அடிமை செய்து தாஸனாக யிருந்தால் மட்டும் போதாது, பகவான் உகந்த அடிமையை அவன் இட்ட வழக்காயிருந்து செய்வதே விசேஷதரமானது என்பதைக் காட்டினார். ஸ்ரீராமனை விட்டுப்பிரிந்திருப்பது பரதனுக்கு, தீயில் குதிப்பது போலவும், கடலில் நீரில்மூழ்குவது போலவும் ஆகும். ராமன் இட்ட கட்டளை என்பதற்காக, அன்புக்குரிய, பிரிக்கமுடியாத தமையனைப் பிரிந்து பதினான்கு வருடம், தவக்கோலத்துடன் ஒருவேளை உண்டு அவன் வரவு நோக்கி கண்ணும் கண்ணீருமாய்க் காத்திருந்தார். பகவத் பாரதந்தர்யம் (இறைவன் இட்ட வழக்காயிருக்கை) என்பதே ஜீவாத்மாவின் நிலைநின்ற ஸ்வரூபம் என்பதை தன் வாழ்வில் நடத்திக் காட்டினார் பரதன்.

## விசேஷதமம்

பகவத் தாஸ்யம் அல்லது பாரதந்தர்யத்தைக் காட்டிலும் பகவத் பக்தர்களாக உள்ள பாகவதர்கள் விஷயத்தில் அவர்கள்

உகக்கும் வண்ணம் நடந்து கொள்வது மிக மிக உத்தமம். பாக வத பாரதந்தர்யமே ஜீவனுக்கு ஸ்வரூபத்தை திடமாக நிலைநிருத்த வல்லது, பகவத் பாரதந்தர்யம் பெற்றிருந்த பரதன் இட்ட வழக் காய் இருந்தவர் சத்ருக்னன்.

இவர்களைப் போன்று, பகவானுக்கு அநுரூபையாய் அவனைத் தொடர்ந்து அவதரித்த பிராட்டியும், சீதையாகத் தோன்றி தனக்கேயுரிய புருஷகாரதர்மத்தை மட்டுமின்றி, உலகத்தார் பின் பற்றி வாழ்ந்து போகும் வகையில் பதிவ்ரதாதர்மத்தைச் சிறப் பாக அனுஷ்டித்துக் காட்டியிருக்கிறாள்,

முன் இரண்டு பகுதிகளில் பிராட்டியின் புருஷகார வைப வத்தை ஸ்ரீராமாயணத்தின் பிரதான அர்த்தமாகவே அனுபவித் தோம். இந்த மூன்றும் பகுதியில் உலகில் பெண்ணாகப் பிறந் தார்க்கு உய்யும் வகையில் அவள் ஆசரித்துக் காட்டிய பதிவ்ரதா தர்மத்தைக் காணலாம்.

ஸ்ரீராமன் காட்டுக்கு எழுந்தருளும்போது, சீதையிடம் வந்து, "நீ அயோத்தியிலேயே மாமனார் மாமியருக்குப் பணிவிடை செய்துகொண்டிரு; பரதன் மிக நல்லவன், உனக்கு ஒரு குறையும் வைக்க மாட்டான்" என்றெல்லாம் சொல்கிறான். அப்போது சீதை,

**'கிமிதம் பாஷஸே ராம வாக்யம் லகுதயா த்ருவம்|**
**த்வயா யதபஹாஸ்யம் மே ச்ருதம் நரவரோத்தம||**

ராம! நீர் சொன்ன வார்த்தையைக் கேட்க, எனக்குச் சிரிப்பு தான் வருகிறது. வெகு லேசாக நிச்சயித்துவிட்டீரே. நான் அப் படி என்ன குற்றம் செய்தேன்? இப்படி தண்டிக்க! என்கிறாள்.

**ஆர்ய புத்ரபிதா மாதா ப்ராதாபுத்ர ஸ்ததா ஸ்நுஷா|**
**ஸ்வாநி புண்யாநி புஞ்ஜாநா: ஸ்வம் ஸ்வம் பாக்யமுபாஸதே||**
**பர்த்துர் பாக்யந்து நார்யேகா ப்ராப்நோதி புருஷர்ஷப|**
**அதச்சைவாஹ மாதிஷ்டா வநே வஸ்தவ்ய மித்யபி||**

தந்தை, தாய், உடன் பிறந்தான், மகன், மருமகள் என்று இப் படியுள்ள உறவினர் யாரும் அவரவர் செய்தவினைப்பயனையே அனுபவிப்பர். ஆனால் மனைவி ஒருத்திதான் தன் கணவனுடைய வினைப்பயனை சுகதுக்கங்களில் பங்கு கொள்ளுபவள். ஆகை யால் மனைவியைத் தன் கணவனின் பாதி உடல் என்றே சாஸ்திரம் கூறுகிறது. உமது தகப்பனார் உம்மைக் காட்டுக்குப் போகும்படி நியமித்தபோதே, அந்த நியமனத்தில் எனக்கும் பங்கு உண்டு.

**ந பிதா ந ஆத்மஜோ ந ஆத்மா ந மாதா நசஸகீஜந: |**
**இஹ ப்ரேத்ய ச நாரீணும் பதிர்ஏகோ கதிஸ் ததா||**

பெண்களுக்கு கணவன் ஒருவனே இம்மை மறுமையிலும் கதி; தந்தையோ, தாயோ, பிள்ளேயோ, தோழியோ, தனக்குத் தானே கதியன்று.

**ப்ராஸாதாக்ரை: விமானேர்வா வைஹாய ஸகதேந வா|**
**ஸர்வாவஸ்தா கதா பர்த்து : பாதச்சாயா விசிஷ்யதே||**

பர்த்தாவை விட்டுத் தனியே ஒருபெண் எத்தகைய போக்யங்களே அனுபவித்தாலும் பயனில்லே. மாடமாளிகையில் வசித்தாலும், இன்பம் மிகு வான ஊர்திகளில் சென்றலும் சுகமில்லே. கணவனுடன் இருப்பதே பரமசுகம். அவனுக்கு பாதசேவை புரிவதே மேலான தர்மம்-

அரண்மனேயில் சுகமாயிரு என்று ராமன் கூறியதற்குப் பதிலாகவே சீதை இதைச் சொல்லுகிருள்.

**ஸஹ த்வயா கமிஷ்யாமி வநமத்ய நஸம்சய: |**
**நாஹம் சக்யா மஹாபாக நிவர்த்தயிது முத்யதா ||**

உம்முடன் கூடவே, இப்போதே காட்டுக்கு நானும் வருவேன்; இதில் சிறிதும் ஐயம் வேண்டாம். நான் உம்மை பிரித்து நாட்டில் வசிக்கமாட்டேன் என்று உறுதியாக மறுத்துவிட்டாள்.

இதைக் கேட்டதும் ராகவன் காட்டில் வசிப்பதில் உள்ள கஷ்டங்களே பல படியாக எடுத்துச் சொல்லுகிருன். இங்கு மனித சஞ்சாரமேயிராது; வனத்தில் வசிப்பது பலவித இன்னலேயும் துயரத்தையும் விளேவிக்கும், புலி, சிங்கம் மற்றும் பல பயங்கர மிருகங்கள் நிறைந்திருக்கும்; உண்பதற்கு நல்ல ஆகாரமோ, குடிக்க நீரோ கிடைக்காது; நல்ல படுக்கை இராது. இத்தகைய துன்பமே அறியாத, ஜனகரின் அருமை மகளான நீ எப்படி காட்டின் துயர்களேத் தாங்க முடியும்? என்கிருன் ராமன்.

ராமனிடம்

ராமன் காட்டில் நேரக்கூடிய இடையூறுகளேக் கூறிய போது பிராட்டி, அவனே ஏளனம் செய்து,

**கிம் த்வாம் அமந்யத வைதேஹ: பிதா மே மிதிலாதிப : |**
**ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம் ||**

க்

ராமா! நீர் ஓர் ஆண் பிள்ளைதானா? நீர் இப்படி சொல்வதை கேட்டால், என் தந்தை மிதிலாதிபர், "ராமனை மாப்பிள்ளையாகப் பெற்றேன், ஆண் உருவில் வந்த ஒரு பெண்ணுக்கல்லவா என் பெண்ணைக் கொடுத்து விட்டேன், என்றல்லவோ கருதுபவர்?" என்கிறாள். "கணவனைப் பிரிந்து உத்தமப் பெண்மணி உயிர் வாழ்ந்து இராள்" என்று ராமா! நீரே சொல்ல நான் கேட்டிருக்கிறேன்என்று கூறி

**பிதா ரக்ஷதி கௌமாரே பர்த்தா ரக்ஷதி யௌவநே |**
**புத்ரா ரக்ஷந்தி வார்தக்யே ந ஸ்த்ரீ ஸ்வாதந்தர்ய மர்ஹதி ॥**

பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கு எப்போதுமே சுதந்திரம் இல்லை. இளம் பருவத்தில் தகப்பனாரையும், யௌவனப் பருவத்தில் கணவனையும் முதுமையில் பிள்ளைகளையுமே அண்டியிருப்பாள்.

**சுத்தாத்மந் ப்ரேமபாவந்தி பவிஷ்யாமி விகல்மஷா |**
**பர்த்தாரமநுகச்சந்தி பர்த்தா ஹி மம தைவதம் ॥**

பெண்களுக்கு பதியே உயர் தெய்வம். ஆகையால் கணவனுக்கு உகந்து பணி செய்தே பாபமற்றவளாகிறாள். எனவே நான் வனத்துக்கு உம்முடன் வந்து உமக்குப் பணி செய்து, பாபமற்றவளாக இருக்க விரும்புகிறேன். இதில் நீர் பொறாமை கொள்வதற்கில்லை. ஏனெனில் நீர் பரிசுத்தமானவரல்லவா?

**பக்தாம் பதிவ்ரதாம் தீநாம் மாம் ஸமாம் ஸுகதுக்கயோ: |**
**நேதுமர்ஹஸி காகுத்ஸ்த ஸமாநஸுக துக்கிநும் ॥**
**யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்கோ நிரயோ யஸ்த்வயா விநா ॥**
**இதி ஜாநந்பராம்ப்ரீதிம் கச்ச ராம மயாஸஹ ॥**

உமது பக்தையாயும், பதிவ்ரதையாயும், தீனையாயும், சுகதுக்கங்களில் உம்முடன் ஒரு நிலைப்பட்டவளாயும் (சுகதுக்கேஸமே பூத்வா" என்பது கீதாசார்யன் வார்த்தை) இருப்பவளல்லவா நான்.

கணவனோடு வசித்தால், பெண்களுக்குக் காடாயினும் அதுவே சொர்க்கம்; கணவனைப் பிரிந்தவளுக்கு எந்த நிலையும் நரகமே இதை உணர்ந்து நீர் என்னை உம்முடன் அழைத்துச் செல்லும்; என்கிறாள்.

இப்படி பல படியாக வாதாடிய சீதையின் விருப்பத்துக்கு இணங்கி ராமன் புன்முறுவல் செய்து, அவளைத் தன்னுடன் காட்டுக்கு அழைத்துச் செல்ல சம்மதித்தான்.

அநஸூயையிடம்

அத்ரி மஹரிஷியின் தர்மபத்னி அநஸூயை மஹா பதிவ்ரதை. நல்ல தவமுடையாள்; கணவனுக்குப் பணிவிடை புரிந்து பழுத்தவள்; காட்டில் மரவுரி அணிந்து ராமனுடன் வந்த சீதைக்கு உயர்ந்த பட்டாடைகளை அணிவித்து, பலவித பொன் ஆபரணங்களையும் பூட்டி, வாடாத மலர் சூட்டி, மணம் மருத சந்தனம் பூசி மகிழ்ந்து வாழ்த்துகிருள். முதன் முதலில் சீதையிடம் அநஸூயை.

**த்யக்த்வா ஞாதிஜனம் ஸீதே மாதம்ருத்திம் ந பாமினி |**
**அவருத்தம் வனே ராமம் திஷ்ட்யாத்வமநுகச்சஸி ||**
**நகரஸ்தோ வநஸ்தோ வா பாபோவா யதி வா சுப: |**
**யாஸாம் ஸ்த்ரீணாம் ப்ரியோ பர்த்தா தாஸாம் லோகேமஹோதய: ||**

ஸீதே! நீ உன் உறவினர், உறுபொருள், மற்றச் சிறப்புக்களையும் துறந்து, ராமனோடு வந்தது தெய்வ சங்கல்பத்தால் நன்றாகவே அமைந்தது. கணவன் நகரவாசியோ, கிராமவாசியோ, நல்லவனோ கெட்டவனோ எப்படி இருந்தாலும் பெண்களுக்குக் கணவனே கண்கண்ட தெய்வம். அவர்களுக்கு நற்கதி அளிப்பவன் அவனே என்று பல படியாக, கணவன் சிறப்புகளை மனைவிக்கு உணர்த்தினள். 'ஸ்ரீராமனிடம் நீ எப்போதும் இப்படியே அனுகூலமாக இருப்பாயாக'' என்றாள். ஸீதை இதைக்கேட்ட போது, லஜ்ஜையுற்றாள்.

**நைதத் தாச்சர்ய மார்யாயா யன்மாம் த்வமபிபாஷஸே |**
**விதிதம் து மமாப்யேதத் யதா நார்யா: பதிர்குரு: |**

"பெண்டிர்க்குப் பதியே தெய்வம் என்னும் இது தெரிந்ததே; ஆயினும் உயரிய உம்வாக்கிலிருந்து வந்ததும் பொருத்தமே' என்று பதில் சொல்லுகிருள்.

அவள் அங்கு கூறும் பதிலில் திரண்ட கருத்து வருமாறு:— எனக்கு ஸ்ரீராமனிடம் ஸ்வரூபத்தாலேயே - இயல்பாகவே ப்ரீதியுண்டு. ஸ்ரீராமனோ தன் வடிவழகு நற்குணங்களால், "பும்ஸாம் திருஷ்டி சித்தாபஹாரிணம்'', 'என்று புருஷர்களின் கண்ணையும் கருத்தையும் கவருகிறார். எல்லோரையும் வசீகரித்து விளங்கும் அவரிடம் நான்கொண்டுள்ள ப்ரீதிக்குக் காரணம் எனது இயல்பான உரிமையே என்பதை வெளிக்காட்ட முடியாமற் போகிறது. ஸ்ரீராமன் குணமற்றவராய், அழகில்லாதவராய் இருந்

திருப்பின் அவரிடம் எனக்கு என்றும் உள்ள இயல்பான அன்பைத் தெளிவாக வெளிப்படுத்திக் காட்ட இயலும்; அவரது கவர்ச்சி அதற்கு இடமளிக்கவில்லை, என்செய்வது? என்கிறுள்

### இருவகை தாஸ்யம்

தாஸ்யம் (அடிமை) இருவகை; ஸ்வரூபக்ருததாஸ்யம் (இயற்கையாகவே அடிமை) குணக்ருத தாஸ்யம் (குணத்தால் கவரப்பெற்று அடிமை புகுதல்) என்று. இவ்விருவகை அடிமைத் திறத்தில் ஸ்வரூபக்ருத இயற்கைஅடிமை) தாஸ்யமே தலைசிறந்தது. அத்தகைய தாஸ்யம் ராமனிடத்தில் தனக்கு உண்டு. என்பதை வெளிக்காட்ட முடியாத நிலையில் தான் இருப்பதை ஒருவாறு அநஸூயைக்கு உணர்ந்துகிறுள் பிராட்டி இங்கு.

### அரக்கியரிடம்

சிறையிருந்த செல்வி, அசோக வனத்தில் ஏகாக்ஷி, ஏகர்ணி முதலான எழுநூறு கோர வடிவமுள்ள அரக்கியர் நடுவே அகப்பட்டு அல்லலுறுகிறுள் ராமனின் எளிவரவு, ராவணனின் பெருமைச் சிறப்புகள் இவற்றைக்கூறி உருட்டல் மிரட்டல்களால், ராவணனுக்கு இசையுமாறு சீதையை அவ்வரக்கிகள் வற்புறுத்துகிறுர்கள். அப்போது சீதை அரக்கிகளுக்குப் பதில் கூறுகிறுள்.

தீனோ வா ராஜ்ய ஹீனோவா யோயமே பர்த்தாஸ மே குரு: |
தம் நித்ய மநுரக்தாஸ்மி யதாஸூர்ய ம்ஸுவர்வச்சலா ||
யதாசசீ மஹாபாகா சக்ரம் ஸமுபதிஷ்டதி |
அருந்ததீ வஸிஷ்டம்ச ரோஹிணீ சசிநம் யதா ||
லோபாமுத்ரா யதா அகஸ்த்யம் சுகந்யா ச்யவநம்யதா |
சாவித்ரீஸத்யவந்தம் சகபிலம் ஸ்ரீமதிர்யதா ||
ஸௌதாஸம் மதயந்தீவ கேசிநீ ஸகரம் யதா |
நைஷதம் தமயந்தீவ பைமீ பதிமநுவ்ரதா ||
யதாஹமிக்ஷ்வாகு ராமம் பதிமநுவ்ரதா ||

என் கணவர் எளிவரவுபட்டிருக்கலாம்; அரசிழந்து அல்லல் படலாம்; எப்படியிருந்தாலும் ஸுவர்ச்சலைக்கு சூரியன் போல் எனக்கு தொடரத்தக்கவர் ஸ்ரீராமனே. மகாபாக்யவதி சசீதேவி இந்திரனை இணைபிரியாள். அருந்ததி வஸிஷ்டரை விடுவதில்லை; ரோகிணி சந்திரனையே தொடருகிறுள், லோபாமுத்திரை அகஸ்தியரை விட்டு அகலுவதில்லை சுகன்யை ச்யவனரையும், சாவித்திரி

சத்யவானேயும் ஸ்ரீமதி கபிலரையும் விட்டு நழுவுவதில்லே. மதயந்தி ஸேளதாசர், கேஸீசி ஸகரர், பீமராஜன் மகள் தமயந்தி நளன் தம்பதிகளேப் பிரிக்க இயலவில்லே. இக்ஷ்வாகு குலக்கொழுந்து ராமனே நான் விடாது தொடருபவள் என்று ஒன்பது இணைகளே உதாரணங் காட்டித் தன் உறுதியை வெளியிடுகிருள் பிராட்டி.

(குறிப்பு:-இந்த சுலோகங்களேப் பாராயணம் செய்யும் பெண்கள் எல்லா மங்களங்களும் பெறுவர் என்பது பெரியோர் வாக்கு).

## அனுமானிடம்

அரக்கிகள் நடுவே அகப்பட்ட சீதை பட்ட துயர் பலவற்றையும் சிம்சுபா மரத்தில் மறைந்திருந்தபடி அனுமான் கண்ணுல் கண்டவர், சிறையிருப்பில், ராமனின் பிரிவு தாளாமல் உயிர் விடத் துணிந்த சீதையின், நிலேயைக் கண்ட அனுமான், தாம் ராமனிடம் திரும்புகையில் சீதையையும் மீட்டுச் சென்று அவரிடம் சேர்ப்பித்துவிட எண்ணினுர். அதற்கு சீதை சம்மதிக்கவில்லே.

**பர்த்ரு பக்திம் புரஸ்க்ருத்ய ரரமாதந்யஸ்ய வாநர |**
**நாஹம் ஸ்ப்ருஷ்டும் ஸ்வதோ காத்ரமிச்சேயம் வாநரோத்தம ||**
**யதஹம் காத்ர ஸம்பர்ஶம் ராவணஸ்ய பலாத்கதா |**
**அநீசா கிம் கரிஷ்யாமி விநாதா விவசா ஸதீ ||**
**யதி ராமோ தசக்ரீவம் இஹ ஹத்வா ஸபாந்தவம் |**
**மாமிதோ க்ருஹ்ய கச்சேத தத்தஸ்ய ஸத்ருசம்பவேத் ||**

உத்தம வானரரே! எனது இந்த சரீரம் ராமன் ஒருவனுக்கே உரியது; இதைக் கொண்டு நாஞக ஒருவரைத் தீண்டவும் மாட்டேன். ராவணன் தீண்டினது என்பது என் விருப்பப்படி அன்று; வன்முறையில் சிக்கிய நான் என் கற்புக்குப் பங்கமின்றி கொண்டு செல்லப்பட்டேன்; நான் என்ன செய்ய இயலும்? ஸ்ரீராமன் இங்கு வந்து ஐயிருதலேயிஞேனே சுற்றத்தாருடன் கொன்று என்னே மீட்டுச் செல்வரேல் அது ஒன்றே அவர் தரத்துக்குச் சேரும். இன்றேல் சீதையை ஒரு அரக்கன் கொண்டு போஞன்; ஒரு வானரம் அவளே மீட்டது என்றல்லவோ உலகம் கூறும். என் கணவன் புகழுக்கு இது இழுக்கு; அவர் பெருமைக்குச் சிறுமை ஏற்படுத்தி நான் என் உயிரைக் காத்துக் கொள்ளத் துணியேன் என்கிருள்.

## சீதையின் மற்றும் சில வார்த்தைகள்

தன் நிலேக்குக் காரணம் கூறி அனுமனிடம் அவள் கூறிய வார்த்தைகளில் ஒன்று:-

மமைவ துஷ்க்ருதம் கிஞ்சிந் மஹதஸ்தி நஸம்சய: |
ஸமர்த்தாவபி தௌ யந்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ ||

''ராமலக்ஷ்மணர் பகைவெல்ல வல்லவர்கள்; என்னைக் கவனியா திருக்கிறார்கள் என்றால் அதற்கு எனது பாபம், மிகப் பெரியபாபம்தான் காரணம். இதில் ஐயமில்லை.'' பாபமற் றவள் சீதை என்பதே உண்மை, ஆயினும் அவள் கூறிக்கொண்ட இரண்டு அபசாரங்கள் உலகை எச்சரிக்கவே.

அதில் ஒன்று ''ஸாக்ஷாத் மந்மதமந்மத:'' என்ற வடிவழகு வாய்ந்தவனான ஸ்ரீராமன் அருகிலிருக்க ''என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணவே'' என்று இருக்கவேண்டிய வளான நான் ஒரு மானைக் கண்டு அதை அடைய விரும்பியது ஒரு பாபம். மற்றொன்று, பரம பாகவதோத்தமரான லக்ஷ்மணனை வாய்க்கு வந்தபடி, சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லி விலக்கினேன். இது மஹத்தான (மிகப்பெரிய) பாபம். இந்த பாகவதாபசாரத்தின் பயனைத்தான் உடனுக்குடனே அனுபவித்து வருகிறேன். ஸ்ரீராமன் அக்கரையிலும் நான் இக்கரையிலுமாக அல்லலுறுகிறோம் என்றாள். உலகத்தில் பெண்கள், பொதுவாக மற்ற பெரியவர்களை தண்டனிட்டு வணங்குவர்; தன் கணவனை அப்படி வணங்கவேண்டும் என்பதை சீதை எடுத்துக் காட்டு கிறாள். அனுமனே! நாங்கள் காட்டுக்கு வரும்போது நால்வராக வந்தோம். ராமன், லக்ஷ்மணன், ராம பாதுகை, நான். லக்ஷ்மணன் தினமும் ராமனை வணங்கி, அதனால் இப்போது அவரைப் பிரியாமல் தொடர்ந்து எல்லா அடிமைகளும் செய்து வாழ்ந்து வருகிறார். பாதுகையோ எனில் ராமனின் திருவடியை விட்டுப் பிரி யமால் பயன்பட்டது; ஆகையால் அது இப்போது அயோத்தி அரசையே ஆள்கிறது. தசரதன் விரும்பியபடி ராமனோ, கைகேயி முயன்றபடி பரதனோ ராஜ்யம் ஆளவில்லை; பாதுகையே பகவதிச் சைப்படி ஆள்கிறது. நானோ 'பட்டமஹிஷி' என்ற செருக்கினால் ஸ்ரீ ராமனை தண்டனிட்டு வணங்காமல் அவரைப் பின் தொடர் தேன்; இப்போது அவரைப் பிரிந்து பெருந்துயர் படுகிறேன். நீர் திரும்பிச்செல்லும்போது என் சார்பாக அவருக்கு தண்டனிட்டு, என் பணிவான நமஸ்காரங்களைத் தெரிவிக்க வேண்டும். அப்போதுதான் விடிவு ஏற்படும் என்றாள்.

சில சமயங்களில் பெண்கள் தங்கள் கணவனுக்கு புத்தி மதிகளையும் கூறலாம் என்பதற்கும் சீதை எடுத்துக்காட்டாக

நடந்து கொண்டிருக்கிறாள். தண்டகாரண்யத்தில் ராமன் நுழைந்ததுமே அங்குள்ள ரிஷிகள் கூடி அரக்கர்களால் தாங்கள் படும் பலவிதமான துயர்களை ராமனிடம் விவரிக்கிறார்கள். 'ராமா. இதோபார்! இங்கே ஒரு வெட்டு; ஒரு குத்து! என்று அரக்கர் தாக்குதலால் தங்கள் உடலில் ஏற்பட்ட காயங்களைக் காட்டுகிறார்கள்

அவர்கள் நிலைகண்டு இரங்கி, அரக்கர் செயல் கண்டுபொங்கி அவ்வரக்கர்களை ஒழித்தே தீருவேன் என்று சூளுரை பகர்கிறான் ராமன். பின்னர் வீரக்கோலத்துடன் காட்டில் திரிகிறான், அவனது வீரக்கோலம் கண்ட பிராட்டி, இனி பூமியில் அரக்கர் பூண்டே இராது என்று அஞ்சுகிறாள். விபரீதம் நேர்ந்து விடக்கூடாதே என்று வெகு பக்குவமாக அவனை சமாதானப் படுத்துகிறாள். 'இராமா! பித்ருவாக்ய பரிபாலனத்தின் பொருட்டு, முனிவேஷம் பூண்டு, வனத்துக்கு வந்துள்ளீர். தங்கள் தவக்கோலத்துக்குத் தக்கவாறல்லவோ நடந்துக் கொள்ள வேண்டும்.

**த்ரீண்யேவ வ்யஸநாந்யத்ர காமஜாநி பவந்த்யுத |**
**மித்யாவாக்யம் குருதரம் தஸ்மாத் குருதராவுபௌ ॥**
**பரதாரபிகமநம் விநா வைரம் ச ரௌத்ரதா |**

இவ்வுலகில் மனோபாவத்தில் விளையும் பாவங்கள் மூன்று; பொய் கூறல், பெரும்பாவம், அதைவிட பிறன்மனை விழைதல் பெருங்குற்றம், அதைப்போன்று பகையின்றியே ஒருவனை தண்டிப்பது மிகவும் கொடுமை.' **ராமோத்விர் நாபி பாஷதே:**-ராமன் இரட்டைச் சொல் கூறான் என்பது அனைவரும் அறிந்ததே. நீர் பொய் கூறீர்; **''பரதாரஞ்ச சக்ஷுர்ப்யாமபி ந பச்யதி'** பிறன்மனை நோக்காப் பேராண்மையுடையீர். அதுவும் அடியாள் அறிவேன்.

**த்ருதீயம் யதிதம் ரௌத்ரம் பரப்ராணாபிஹிம்ஸநம் |**
**நிர்வைரம் க்ரியதே மோஹாத்தச்சதேஸமுபஸ்திதம் |**

பிற உயிரை வதைத்தல் என்னும் மூன்றாவது கொடுமை ரிஷிகள் பக்கல் கண்ணோட்டம் (ஓரம், பக்ஷபாதம்) காரணமாக பகையின்றியே தாக்குவது என்பது தேவரீருக்கு நேர்ந்துள்ளது.

ரிஷிகளுக்கு பாதுகாப்பாக அவர்கள் கூறும்முன்பே வில்லையும் அம்பையும் ஏந்தி விட்டீரே என்று அஞ்சுகிறேன். நெருப்புக்கு விறகுபோல் க்ஷத்திரியருக்கு வன்முறையை வளர்க்குமே.

ஸ்ரீராம! ஆயுதங்களின் சஹவாஸம் தீயைத் தொடுவது போன்றது. உம்மிடம் எனக்கு ஸ்நேஹம் உண்டு, மரியாதையும் மிகவுண்டு; உமக்கு நான் போதிப்பதாக எண்ணக்கூடாது! நினைவூட்டுகிறேன் அவ்வளவே.

**அக்நி ஸம்யோகவத்தேது: சஸ்த்ரஸம்யோக உச்யதே |**
**ஸநேஹாச்ச பஹுமாநாச்சஸ்மாரயே த்வாம் ந சிக்ஷயே ||**

நீர் இப்போது தவ வேஷம் பூண்டுள்ளீர். வில்லை ஏந்தி விரோதமில்லாத வரை வதம் செய்வது தகாது; அதைக் கைவிடும்'' என்கிருள்.

ராக்ஷஸ வதத்துக்குத் தன் பிரிவே காரணமாக அமையும் என்று கருதும் பிராட்டிக்கு ராமன் தன் கருத்தாக, அரக்கர் பக்கல் தவறுகள் காரணமாகவே அந்த வதம் ஏற்படும் என்ற கருத்தை ஒருவாறு வெளியிடுகிருன். யக்ஞவிக்நகரம் ஹந்யாம்''—யாகங்களைக் குலைப்பவர்களைக் கொல்வேன் என்பது பகவான் வாக்கு. முடிவாக ராமன் கூறுவது.

**அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம்வாஸீதே ஸலக்ஷ்மணாம் |**
**நது ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராம்ஹணேப்யோ விசேஷத: ||**

''ஸீதே! நான் என் உயிரை விட்டாலும் விடுவேன், என் உயிரினுனுமினிய, 'ப்ராணேப்யோபகரீயஸி' (பிராணனைக் காட்டிலும் பிரியமானவள்) எனும் உன்னை விட்டாலும் விடுவேன்; நம் இருவர் உயிரினும் இனிய இளையவனை விடினும் விடுவேன் முக்கியமான; அந்தணர்க்கு அளித்துள்ள வாக்கை நிறைவேற்றியே தீருவேன்'. என்கிருன் ராமன். அடியாரை நழுவவிடாத அச்சுதன் அல்லவா.

சீதையின் சரிதம் ராமனுடையதைவிட மஹத்தானது. 'மாதர் மைதிலி' என்னும் ஒரு சுலோகத்தில் ''லகுதரா ராமஸ்ய கோஷ்டி க்ருதா''—பெருமாளுடைய கோஷ்டி உன்னல் மிகச் சிறியதாக்கப்பட்டது என்று அன்னையின் கருணைப் பெருக்கை மிக அற்புதமாக பட்டர் என்னும் ஆசாரியர் அருளிச் செய்துள்ளார். விரிவஞ்சி இத்துடன் நிற்கிறோம்.

நன்றி-அறநெறி பதிப்பகம், மயிலை.

—